பாவங்களிலிருந்து! வியாதிகளிலிருந்து! பிரச்சனைகளிலிருந்து!




# இயேசு விடுவிக்கிறார்

Volume: 42 Issue: 02 February 2021 Bro. Mohan C. Lazarus Annual Subscription: ₹ 50/- Single Copy: ₹ 5/-

## சொன்னதைச் செய்யும் தேவன்!

சோர்ந்து போகாதே,

**"நான் உனக்குச் சொன்னதைச் செய்யுமளவும் உன்னைக் கைவிடுவதில்லை."**

ஆதி. 28:15.

## இழந்து போனதை திரும்ப அளிப்பேன்!



# உங்கள் சகோதரனிடமிருந்து...

இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தில், உங்களுக்கு என் அன்பின் வாழ்த்துக்கள்!

சுகமாக இருக்கிறீர்களா? சந்தோஷமாக இருக்கிறீர்களா? **நீங்கள் சுகமாக, எப்பொழுதும் சந்தோஷமாக இருக்க வேண்டும்** என்றுதான், கர்த்தராகிய இயேசு கிறிஸ்து விரும்புகிறார். நாங்களும் அதையே விரும்புகிறபடியினால், **உங்களுக்காக ஜெபிக்கிறோம்.**

கர்த்தராகிய தேவன், கடந்த மாதம் முழுவதும் நம்மையும், ஊழியத்தையும் மிக அற்புதமாகக் காத்து, வழி நடத்தினார். அவரைத் துதியுங்கள்!

**"நீங்கள் இழந்து போனதை...'உங்களுக்குத் திரும்ப அளிப்பேன்."** (யோவேல் 2:25) என்கிற வாக்குத்தத்தத்தின்படி, அனேகருக்கு கர்த்தராகிய தேவன் அற்புதம் செய்து, இழந்து போனதை திரும்ப அளித்த பல சாட்சிகளை கேள்விப்பட்டபோது, வாக்களித்த தேவனை துதித்தேன்.

**உங்களுக்கும் செய்வார்!** தான் வாக்களித்தபடியே, **நீங்கள் இழந்ததை** எல்லாம் கர்த்தராகிய தேவன் உங்களுக்குத் தருவார்! தினமும் வாக்குத்தத்தத்தைச் சொல்லி ஜெபியுங்கள். இழந்து போனதை எல்லாம் நீங்களும் திரும்பப் பெற்றுக் கொள்வீர்கள்!

கடந்த மாதத்தில் **வாலிபர்களுக்காக இரண்டு முகாம்களை** நடத்த கர்த்தராகிய தேவன் உதவி செய்தார். இந்தக் கடைசி நாட்களில் எழுப்புதல் அக்கினியைப் பரவச் செய்ய, கர்த்தராகிய தேவன் திரளான வாலிபர்களை எழுப்பிக் கொண்டிருக்கிறார்.

நடைபெற்ற இரண்டு வாலிபர் முகாம்களிலும் சுமார் **3,500**க்கும் அதிகமான வாலிபர்களை கர்த்தராகிய தேவன் எழுப்பி இருக்கிறார். எழுப்புதல் ஆரம்பித்து விட்டது! இனிமேல் அது தீவிரமாகப் பரவ வேண்டும். இதற்காகத்தான் வாலிபர்களை கர்த்தராகிய தேவன் எழுப்பி இருக்கிறார்.

அடுத்தபடியாக, எழுப்புதல் திட்டத்தில் **சிறு பிள்ளைகளையும்** கர்த்தராகிய தேவன் வல்லமையாகப் **பயன்படுத்தப் போகிறார்!** இதற்காக **சிறு பிள்ளைகளுக்கான எழுப்புதல் முகாம்** நடத்தப்பட இருக்கிறது. இதற்கான தேதி சீக்கிரத்தில் அறிவிக்கப்படும்.

கர்த்தராகிய தேவன் வாக்குக் கொடுத்தபடியே, திரளான ஆத்துமாக்களை நமக்குத் தந்து வருகிறார். அவரைத் **துதியுங்கள்!** இந்த மாத ஊழியங்களுக்காக **அதிகமாக ஜெபியுங்கள்!**

**இது கடைசிக் காலம்! கொடிதான காலம்! கடைசிக் கால ஆபத்துக்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து கொண்டுதான் இருக்கும்!** ஆனாலும், **கலங்காதீர்கள்! உங்கள் ஜெபத்தை அதிகப்படுத்துங்கள்! தனி ஜெபம், குடும்ப ஜெபம், குழு ஜெபங்களை விட்டு விடாதீர்கள்.**

எழுப்புதல் அக்கினி போடப்பட **ஜெபியுங்கள்**. நம்முடைய **தேசத்திற்காக தினமும் ஜெபியுங்கள்**.

**எனக்காகவும்**, நம் **'இயேசு விடுவிக்கிறார்'** ஊழியங்களுக்காகவும் **தொடர்ந்து ஜெபியுங்கள்**. நாங்களும் உங்களுக்காக **ஜெபிக்கிறோம்!**

கிருபை உங்களோடிருப்பதாக!

உங்கள் சகோதரன்,

Mohan C L



# சோர்ந்து போகாதே, "நான் உனக்குச் சொன்னதைச் செய்யுமளவும் உன்னைக் கைவிடுவதில்லை."

**ஆதி. 28:15.**

**கர்த்தராகிய தேவன் இந்த 2021ம் ஆண்டுக்கு** வாக்குக் கொடுத்தபடி, இழந்து போனதை உங்களுக்குத் திரும்பத் தந்திருக்கிறாரா? அனேகர் இந்த வாக்குத்தத்தத்தைச் சொல்லி ஜெபித்து, அற்புதத்தைப் பெற்றுக் கொண்டதை சந்தோஷமாகச் சொல்லி, தேவ நாமத்தை மகிமைப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்!

"இதுவரை எனக்கு அப்படி ஒன்றும் நடக்கவில்லையே!" என்று சொல்லி, கவலைப்பட்டுக் கொண்டு இருக்கிறீர்களா? **கலங்காதீர்கள்! இந்த மாதத்தில் கர்த்தராகிய தேவன் உங்களுக்குச் செய்வார்!** இந்த மாதத்திலும் தேவ சமூகத்தில் நான் உங்களுக்காக ஜெபித்தபோது, **"நான் உனக்குச் சொன்னதைச் செய்யுமளவும் உன்னைக் கைவிடுவதில்லை..."** (ஆதி. 28:15) என்கிற வாக்குத்தத்தத்தை உங்களுக்கு ஞாபகப்படுத்தச் சொன்னார்.

கர்த்தராகிய தேவன், **'யாக்கோபு'** என்கிற ஒரு மனிதனுக்கு வாக்குக் கொடுத்து, "நான் உனக்கு வாக்குக் கொடுத்தேன் அல்லவா? **நான் சொன்னதைச் செய்யுமளவும் உன்னைக் கைவிடுவதில்லை!"** என்று சொன்னார்.

அன்றைக்கு யாக்கோபைப் பார்த்துச் சொன்ன அதே கர்த்தராகிய தேவன், இன்றைக்கு உங்களையும் பார்த்து, "என் மகனே(ளே), நான் உனக்கு வாக்குக் கொடுத்திருக்கிறேன். அதை நான் செய்வேன்! அதை செய்து முடிக்கும் வரை **உன்னை நான் கைவிட மாட்டேன்."** என்று சொல்கிறார்.

நமக்கு கர்த்தராகிய ஒரு தேவன் உண்டு! அவர் சொன்னதைச் செய்கிற ஒரு தேவன்! சொல் தவறாத தேவன்!

**"பொய் சொல்ல தேவன் ஒரு மனிதன் அல்ல; மனம்மாற அவர் ஒரு மனுபுத்திரனும் அல்ல; அவர் சொல்லியும் செய்யாதிருப்பாரா? அவர் வசனித்தும் நிறைவேற்றாதிருப்பாரா?"** (எண். 23:19) என்று பரிசுத்த வேதாகமம் சொல்கிறது.

"மனம் மாறுவதற்கு நான் மனிதனல்ல! நான் சொன்னதை நிறைவேற்றித் தருவேன்! நான் சொல்லி விட்டு, அதைச் செய்யாமல் இருப்பேனா?" என்று கர்த்தராகிய தேவன் மிகத் திட்டமாகச் சொல்கிறார்.

**மனிதர்கள்** வாக்குக் கொடுப்பார்கள்! ஆனால் மறந்து விடுவார்கள்! மனம் மாறிப் போய்

விடுவார்கள்! சிலருக்கு, "அதைச் செய்ய வேண்டும்." என்று நினைத்தால் கூட, செய்ய முடியாத சூழ்நிலை வந்து விடும்! அவ்வளவுதான்!

ஆனால், கர்த்தராகிய தேவன் அப்படிப்பட்டவர் அல்ல. அவர் சர்வ வல்லமையுள்ள தேவன்! அவர் வாக்கு மாறாதவர்! சொல் தவறாதவர்! உங்களுக்கு அவர் சொன்னபடியே செய்வார்!

இந்த 2021ம் வருடத்திற்கு, கர்த்தராகிய தேவன் வாக்குக் கொடுக்கும்போது, "**நீ இழந்து போனதை எல்லாம் உனக்குத் திரும்ப அளிப்பேன்.**" (யோவேல் 2:25) என்று சொன்னார் அல்லவா? கட்டாயம் உங்களுக்கு திரும்பத் தருவார்.

நீங்கள் இழந்து போன வேலை, இழந்து போன தொழில், இழந்து போன வருமானம், இழந்து போன படிப்பு, இழந்து போன சொத்துக்கள், இழந்து போன ஊழியம், இழந்து போன காரியம் எதுவாக இருந்தாலும் சரி, அவைகளை எல்லாம் கர்த்தராகிய தேவன் உங்களுக்குத் திரும்ப அளிப்பார். அவர் சொன்னால் சொன்னதுதான்! தான் சொன்னபடியே, அவர் உங்களுக்குத் திரும்ப அளித்து, உங்களை மகிழப் பண்ணுவார்.

ஆனால், இந்த ஆசீர்வாதத்தை எல்லாம் எப்படிப் பெற்றுக் கொள்வது?

## வாக்குத்தத்தத்தைச் சொல்லி ஜெபியுங்கள்!

**ஜெபம் பண்ணித்தான் பெற்றுக் கொள்ள வேண்டும்.** ஜெபிக்காமல் சும்மா இருந்தால், கிடைக்காது. கர்த்தராகிய தேவன் கொடுத்த வாக்குத்தத்தத்தைச் சொல்லி ஜெபம் பண்ணி, இழந்து போன அந்த ஆசீர்வாதத்தை திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

**யாக்கோபு** நெருக்கடியான ஒரு சூழ்நிலையில் ஜெபம் பண்ணி, கர்த்தராகிய தேவனுடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொண்டதும், அந்த சூழ்நிலை அவருக்கு நன்மையாக மாறிய சம்பவமும் பரிசுத்த வேதாகமத்தில் எழுதப்பட்டு இருக்கிறது. **(ஆதி. 32:9-12).**

எனக்கு அன்பானவர்களே, அந்த யாக்கோபைப்போல நீங்களும் ஜெபித்தால், கர்த்தர் **வாக்குக்** கொடுத்தபடியே உங்களுக்குச் செய்வார். நீங்கள் **ஜெபிக்க ஜெபிக்கத்தான்,** அந்த வாக்குத்தத்தத்தின் **ஆசீர்வாதங்களை உங்களால் பெற்றுக் கொள்ள** முடியும். ஏனென்றால், "**கேட்கிறவன் எவனும் பெற்றுக்கொள்ளுகிறான்;**" (மத்தேயு 7:8) என்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொல்லி இருக்கிறார். **ஜெபிக்காதவர்கள் எந்த ஆசீர்வாதத்தையும்** பெற்றுக் கொள்ள **முடியாது.**

ஆகவே, நீங்கள் கர்த்தராகிய தேவனுடைய சமூகத்திற்குப் போய் அமர்ந்து, வேத வசனங்களை வாசித்து, தியானித்து, ஜெபிக்க வேண்டும். **சுயநலமாக உங்களுக்காக மட்டுமே நீங்கள் ஜெபித்துக் கொண்டிருக்கக் கூடாது.**

முதலாவது மற்றவர்களுக்காக ஜெபிக்க வேண்டும். அதாவது நம்முடைய தேசத்திற்காக, நம்முடைய தேசத்திலுள்ள மக்களுக்காக, நம்முடைய மாநிலத்திற்காக, நம்மைச் சுற்றியிருக்கிற மக்களுக்காக ஜெபம் பண்ணி விட்டு, கடைசியாக கர்த்தருடைய வாக்குத்தத்தத்தை சொல்லி, உங்களுக்காக நீங்கள் ஜெபிக்க வேண்டும்.

"எப்படி ஜெபிப்பது?" என்று கேட்கிறீர்களா? இதோ, ஒரு சில காரியங்களை உங்களுக்கு சொல்லித் தருகிறேன்.

யாக்கோபு ஜெபம் பண்ணும்போது, **"உன் தேசத்துக்கும் உன் இனத்தாரிடத்துக்கும் திரும்பிப்போ, உனக்கு நன்மை செய்வேன் என்று என்னுடனே சொல்லியிருக்கிற கர்த்தாவே,...**

**நான் உனக்கு மெய்யாகவே நன்மைசெய்து, உன் சந்ததியை எண்ணிமுடியாத கடற்கரை மணலைப்போல மிகவும் பெருகப்பண்ணுவேன் என்று சொன்னீரே**..." (ஆதி. 32:9,12), "அதை நிறைவேற்றும்." என்று கர்த்தராகிய தேவன் கொடுத்த வாக்குத்தத்தத்தைச் சொல்லி ஜெபித்தார்.

யாக்கோபைப்போல **நீங்களும் வாக்குத்தத்தத்தைச் சொல்லி, விசுவாசத்தோடு ஜெபிக்க வேண்டும்.**

"இயேசுவே, எனக்கு இப்படியாக நீர் வாக்குக் கொடுத்திருக்கிறீர்! அந்த வாக்குத்தத்தம் எனக்குத்தான் என்று நான் விசுவாசிக்கிறேன். நீர் சொன்னபடி செய்கிற தேவன் அல்லவா? அதை எனக்கு நிறைவேற்றித் தாரும்." என்று சொல்லி ஜெபியுங்கள். ஜெபத்தைக் கேட்கிற கர்த்தராகிய தேவன் உங்களுக்கு அற்புதங்களைச் செய்வார்.

எனக்குத் தெரிந்த ஒரு குடும்பத்தார் செய்து கொண்டிருந்த தொழில் நஷ்டமடைந்து, கடன் பிரச்சனைக்குள்ளாகி விட்டார்கள். தங்களுடைய ஒவ்வொரு பொருட்களையும் இழந்து, கடைசியாக சொந்த வீட்டையும் இழந்து, "இனி வாழவே முடியாது!" என்கிற ஒரு நிலைமைக்கு வந்து விட்டார்கள்.

அப்படிப்பட்ட இக்கட்டான ஒரு சூழ்நிலையில், "சுற்றிலும் இருக்கிறவர்கள் மத்தியில் மதிப்பையும், மரியாதையையும் இழந்து, அவமானப்பட்டு நிற்க வேண்டிய நிலைமை வந்து விடுமோ?" என்று எண்ணி, மனமுடைந்து போய், "தற்கொலை பண்ணி செத்து விட வேண்டியதுதான்!" என்று நினைத்து, கலங்கிப் போயிருந்த சமயத்தில், நமது, '**இயேசு விடுவிக்கிறார்**' – தொலைக்காட்சி நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டு இருந்திருக்கிறார்கள்.

அந்த நிகழ்ச்சியில் சொல்லப்பட்ட ஒரு சாட்சியின் மூலமாக, "நீ எதற்காக தற்கொலை பண்ணி சாக வேண்டும்? எல்லாவற்றையும் இழந்து அவமானப்பட்டு நிற்கிறதினால், மரித்துப் போகிறதினால் உனக்கு நன்மை கிடைத்து விடுமா? விசுவாசத்தோடு நீ ஜெபம் பண்ணு!" என்று கர்த்தருடைய ஆவியானவர் அவர்களோடு பேசியபோது, அவர்களுக்குள் ஒரு விசுவாசம் உண்டானது.



அந்த நிகழ்ச்சியில் நான் பேசும்போது, "உங்களுடைய தேவைகளை எல்லாம் எழுதி வைத்து, தினமும் அதைச் சொல்லி ஜெபம் பண்ணுங்கள். அப்பொழுது கர்த்தராகிய தேவன் உங்களுக்கு அற்புதம் செய்வார்!" என்று சொன்னேன். உடனே அவர்கள் நான் சொன்னபடியே தங்கள் தேவைகள், கடன் பிரச்சனைகள், இழந்து போன காரியங்கள் எல்லாவற்றையும் எழுதி வைத்து, தினமும் குடும்பமாக அமர்ந்து ஜெபிக்க ஆரம்பித்தார்கள்.

எனக்கு அன்பானவர்களே, அனேக முறை நாம் செய்கிற தவறு என்ன தெரியுமா? ஒருநாள் ஜெபிப்போம்! அடுத்த நாள் அதை மறந்து விடுவோம்! சில சமயங்களில், "நாம் எதற்காக ஜெபித்தோம்? அதற்கு பதில் கிடைத்ததா? இல்லையா?" என்கிற ஒரு யோசனை கூட இல்லாமல் இருந்து விடுகிறோம்.

ஏதோவொரு அவசரத்தில் ஜெபித்து விட்டு, பிறகு அதை அப்படியே மறந்து போய் விடுகிறோம். தேவ பிள்ளைகளாகிய நாம் அப்படி இருக்கக் கூடாது, **ஜெபக் குறிப்புகளை எழுதி வைத்து, தினமும் கருத்தாக** விசுவாசத்தோடு **ஜெபித்தால், கர்த்தராகிய தேவன் கட்டாயம் பதில் தருவார்.**

பாருங்கள், அந்தக் குடும்பத்தார் அப்படியாக எழுதி, தினந்தோறும் தேவ சமூகத்தில் வைத்து ஜெபிக்க ஜெபிக்க, கர்த்தராகிய தேவன் அவர்களுக்கு ஒரு புதிய வழியைத் திறந்து கொடுத்தார். அவர்களை புதிதான ஒரு இடத்திற்குக் கொண்டு போய், தொழிலுக்கான புதியதொரு வாசலைத் திறந்து கொடுத்து, கொஞ்சம் கொஞ்சமாக அந்தத் தொழிலை கர்த்தராகிய தேவன் ஆசீர்வதித்து, அவர்களுடைய வருமானத்தைப் பெருகப் பண்ண ஆரம்பித்தார்.

எந்த வருடத்தில் கடன் வாங்கினார்களோ, அந்த வருடம் முடிவதற்குள்ளாகவே முழுக் கடனையும் அடைத்து முடிக்கவும், இழந்து போன எல்லாவற்றையும் திரும்பப் பெற்றுக் கொள்ளவும், கர்த்தராகிய தேவன் அவர்களுக்கு உதவி செய்தார். அதை மிகுந்த மகிழ்ச்சியோடு எனக்கு சாட்சியாக எழுதி அனுப்பி இருந்தார்கள்.

எவ்வளவு பெரிய சந்தோஷம் பார்த்தீர்களா? **உங்களுக்கும் கர்த்தர் செய்வார்!**

நீங்களும் உங்கள் தேவைகளை ஒரு ஜெபக் குறிப்பாக எழுதி வைத்து, தொடர்ந்து அதற்காக ஜெபிக்க ஜெபிக்க, உங்கள் விசுவாசம் பெலனடையும். மட்டுமல்ல, "பெற்றுக் கொள்ளும் வரைக்கும் ஜெபிக்க வேண்டும்." என்கிற ஒரு எண்ணம் உங்களுக்கு உண்டாகும்.

அப்படியாக நீங்கள் தினந்தோறும் ஜெபிக்கும்போது, கர்த்தராகிய தேவன் உங்கள் ஜெபத்தில் கவனம் வைத்து, "என் பிள்ளை விடாமல் என்னிடத்தில் கேட்கிறா(ன்)ள்! நான் அற்புதம் செய்தாக வேண்டும்!" என்று கட்டாயம் அந்த அற்புதத்தை செய்து விடுவார்.

ஆகவே, தேவ பிள்ளைகளாகிய நாம் கர்த்தர் கொடுத்திருக்கிற வாக்குத்தத்தத்தைச் சொல்லி, விசுவாசத்தோடு ஜெபிக்க வேண்டும். அப்பொழுது கர்த்தராகிய தேவன் அற்புதங்களைச் செய்து, நம்மை ஆசீர்வதிப்பார்!



# தாழ்த்தி ஜெபியுங்கள்!

பக்தனாகிய யாக்கோபு, "**அடியேனுக்கு தேவரீர் காண்பித்த எல்லா தயவுக்கும் எல்லா சத்தியத்துக்கும் நான் எவ்வளவேனும் பாத்திரன் அல்ல, நான் கோலும் கையுமாய் இந்த யோர்தானைக் கடந்துபோனேன்; இப்பொழுது இவ்விரண்டு பரிவாரங்களையும் உடையவனானேன்.**" (ஆதி. 32:10) என்று சொல்லி, தேவனுக்கு முன்பாக தன்னை தாழ்த்தி ஜெபித்தார்.

தேவ பிள்ளைகளாகிய நாமும் கூட தேவ சமூகத்திற்குப் போகும்போது, **நமக்குள் எதைக் குறித்தாவது பெருமை இருக்குமானால், அதை எல்லாம் விட்டு விட வேண்டும்.**

"என்னுடைய படிப்பென்ன? என்னுடைய வேலையென்ன? என்னுடைய அனுபவம் என்ன? என்னுடைய அந்தஸ்து என்ன?" என்கிற பெருமையான எண்ணங்களை எல்லாம் விட்டு விட்டு, கர்த்தராகிய தேவனுக்கு முன்பாக நம்மைத் தாழ்த்தி, அர்ப்பணித்து நாம் ஜெபிக்கும்போது, அவர் நமக்கு கிருபை அளிப்பார்.

அனேகருடைய ஜெபம் கேட்கப்படாமல், ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொள்ள முடியாமல் போவதற்குக் காரணம், அவர்களுக்குள் காணப்படுகிற பெருமைதான்! **அந்தப் 'பெருமை' என்பது, நம்மை அறியாமலேயே நமக்குள் வந்து விடும்!** பெருமை நமக்குள் எப்படி வருகிறது என்பதை கண்டுபிடிப்பது கூட மிகவும் கஷ்டம். காரணம் என்னவென்றால், அதற்குப் பின்பாக இருப்பது பிசாசு!

ஏனென்றால், பிரதானமான தேவ தூதனாக இருந்த அவன், தன்னுடைய இருதயத்திற்குள் பெருமை கொண்டு, கர்த்தராகிய தேவனுக்கும் மேலாக தன்னை உயர்த்த நினைத்த போதுதான், அவனை பரலோகத்திலிருந்து கர்த்தராகிய தேவன் தள்ளிப் போட்டார்.

பெருமையின் நிமித்தமாகத்தான் அவன் பிசாசாக மாறிப் போனான்! அதே காரியத்தைத்தான் அவன் இப்பொழுதும் செய்து கொண்டிருக்கிறான். மனிதர்களுக்குள் பெருமையை விதைத்து விடுவான்! தேவ ஊழியக்காரர்களுக்குள் கூட பெருமையைக் கொண்டு வந்து விடுவான்!

தேவ ஊழியக்காரனாகிய நான் கூட கவனமாக இருக்கவில்லை என்றால், எனக்குள்ளும் அவன் பெருமையான சிந்தையைக் கொண்டு வந்து விடுவான். தேவ பிள்ளைகளாகிய நாம் இந்தக் காரியத்தில் மிகவும் கவனமாக இல்லா விட்டால், நம்மையும் கவிழ்த்து விடுவான்.



ஆக, பெருமையுள்ள இருதயத்தோடு ஜெபிக்கிற ஜெபத்திற்கு, கர்த்தராகிய தேவன் ஒருபோதும் பதில் கொடுப்பதில்லை. அதனால்தான் அனேக ஆசீர்வாதங்களை நாம் இழந்து போகிறோம். ஆகவே, **கர்த்தராகிய தேவனுக்கு முன்பாக எப்போதுமே உங்களை தாழ்த்த பழகிக் கொள்ளுங்கள்.**

குறிப்பிட்ட கிராமத்தைச் சார்ந்த ஒரு குடும்பத்தார் பெரிய பணக்காரர்களாக இருந்தார்கள். அவர்களுக்கு அனேகப் பிரச்சனைகள்! இழப்புகள்! அதன் நிமித்தமாக மிகவும் அவமானப்பட்டு, நெருக்கப்பட்டு, கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அந்த சமயத்தில், அங்குள்ள ஒரு போதகர் ஐயா அவர்கள், "அந்தக் குடும்பத்தார் பாவம்! மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்! அவர்களுக்காக ஜெபித்து விட்டு வர முடியுமா?" என்று என்னிடத்தில் கேட்டுக் கொண்டார்கள்.

நான் அங்கு போய் பார்த்தபோது, அவர்கள் எல்லோரும் மிகுந்த துக்கத்தோடு இருந்தார்கள். பெரிய வீடுதான்! ஆனால், உள்ளுக்குள் சமாதானத்தையும், சந்தோஷத்தையும் இழந்து, மிகுந்த மனக் கஷ்டத்தில் இருந்தார்கள்.
கொஞ்ச நேரம் அவர்களோடு பேசி விட்டு, நானும், அந்த போதகர் ஐயாவும் ஜெபிப்பதற்காக முழங்கால்படியிட்டோம்.

நான் கண்களை மூடி ஜெபிக்க ஆரம்பித்தபோது, ஆவியானவர் என்னோடு இடைப்பட்டு, "உன் கண்களைத் திறந்து கொஞ்சம் பார்." என்றார். நான் பார்த்தபோது, அந்த வீட்டாரில் ஒருவர் கூட முழங்கால்படியிடவில்லை. எல்லோரும் கண்களைத் திறந்து வைத்துக் கொண்டு, தலையைக் குனிந்து ஜெபிப்பதைப்போல வசதியாக ஷோபாவில் உட்கார்ந்து கொண்டு இருந்தார்கள். இவ்வளவுக்கும் அவர்கள் எல்லோரும் கிறிஸ்தவர்கள்தான்!

பெரியவர்கள் முதல், சிறியவர்கள் வரை யாருமே தங்களை அர்ப்பணிக்கவில்லை. **தேவனுக்கு முன்பாக தங்களை தாழ்த்த வேண்டும் என்கிற உணர்வு கூட அவர்களில் யாருக்குமே இல்லை. அப்போது கர்த்தருடைய ஆவியானவர், "இப்படிப் பெருமையோடு இருக்கிறவர்களை நான் எப்படி ஆசீர்வதிக்க முடியும்?" என்று கேட்டார்.**

எனக்கு அன்பானவர்களே, நாம் கர்த்தராகிய தேவனுக்கு முன்பாக முழங்கால்படியிடும்போது, மிகுந்த பயத்தோடு நம்மை தாழ்த்த வேண்டும். சர்வ வல்லமை பொருந்திய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நமக்கு ஜெபிக்கக் கற்றுக் கொடுத்திருக்கிற ஜெபத்தை சற்று தியானித்துப் பாருங்கள். அவர் கெத்செமனே தோட்டத்தில் முழங்கால்படியிட்டு, முகங்குப்புற விழுந்து, உலகத்தின் எழுப்புதலுக்காக ஜெபம் பண்ணினார். நமக்கு தாழ்மையைக் கற்றுக் கொடுத்தார்.

எனக்கு அன்பானவர்களே, நம்முடைய ஜெபத்திற்கு கர்த்தராகிய தேவனிடத்திலிருந்து பதில் வந்தால் கூட, "என் ஜெபத்தை கர்த்தர் கேட்டார்!" என்று பெருமையாகப் பேசி விடாதிருங்கள். எல்லாமே அவருடைய சுத்தக் கிருபை! வேறொன்றுமே இல்லை.

கர்த்தருடைய அனாதித் தீர்மானத்தின்படியே, நமது, **"இயேசு விடுவிக்கிறார்"- ஜெபிக்கலாம் வாங்க!"** தொலைக்காட்சி நிகழ்ச்சி தொடர்ச்சியாக ஒளிபரப்பாகி வருகிறது. அதை உலகம் முழுவதுமாக லட்சக்கணக்கான ஜனங்கள் பார்த்து ஆசீர்வதிக்கப்பட்டு வருகிறார்கள்! எண்ணில் அடங்காத திரள் கூட்ட ஜனங்கள் இரட்சிக்கப்படுகிறார்கள்! வியாதிகளிலிருந்து சுகத்தைப் பெற்றுக் கொள்கிறார்கள்!

அதைப் பற்றியெல்லாம் நான் யோசித்துப் பார்த்தபோது, "இவ்வளவு பெரிய காரியங்களை எல்லாம் கர்த்தராகிய தேவன் என்னைக் கொண்டு செய்து கொண்டிருக்கிறாரே! இதற்கு எனக்கு என்ன தகுதி இருக்கிறது?" என்று நினைத்தேன். நான் தேவ சமூகத்திற்குப் போய் முழங்கால்படியிட்டு, "ஆண்டவரே, இந்த தேசத்தில் என்னை விட எவ்வளவோ பரிசுத்தவான்கள் இருக்கிறார்கள்! என்னை விட எவ்வளவோ அதிகமாக ஜெபிக்கிறவர்கள் இருக்கிறார்கள்! என்னை விட அதிகமாக தியாகத்தோடு ஊழியம் செய்கிறவர்கள் இருக்கிறார்கள்! தேசத்தின் எழுப்புதலுக்காக என்னை விட அதிகமாக பிரயாசப்படுகிறவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள்! இப்படியிருக்க என்னை ஏன் பயன்படுத்துகிறீர்? இதற்கெல்லாம் நான் தகுதியுள்ளவனாக எனக்குத் தெரியவில்லையே!" என்று சொன்னேன்.

அப்பொழுது கர்த்தராகிய தேவன், "மகனே, உன்னுடைய தகுதியை வைத்து அல்ல! என்னுடைய

கண்களில் உனக்குக் கிருபை கிடைத்தது! நான் உன் மீது வைத்திருக்கிற கிருபையினால்தான் இப்படியாக ஊழியத்தில் உன்னை பயன்படுத்தி வருகிறேன்!" என்று சொன்னபோது, கர்த்தராகிய தேவன் என் மீது வைத்திருக்கிற கிருபையை நினைத்து, மிகுந்த கண்ணீரோடு என்னை மறுபடியும் ஒப்புக் கொடுத்தேன்.

எனக்கு அன்பானவர்களே, **தயவு செய்து ஒரு நாளும் பெருமைக்கு இடம் கொடுத்து விடாதிருங்கள்.** "என்ன நடந்தாலும் இயேசு கிறிஸ்துதான்! அவருடைய கிருபைதான்!" என்று சொல்லி, அவரை உயர்த்துவதில் மட்டும் கவனமாக இருங்கள். **உங்கள் உள்ளத்திற்குள் பெருமை வந்து விடாதபடி மிகவும் கவனமாக இருங்கள்.**

**கர்த்தராகிய தேவனுக்கு முன்பாக உங்களை தாழ்த்தி ஜெபித்தால், உடனே அற்புதம் செய்து விடுவார்!**

காரணம், "**தேவன் பெருமையுள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறார், தாழ்மையுள்ளவர்களுக்கோ கிருபை அளிக்கிறாரென்று சொல்லியிருக்கிறது.**" யாக்கோபு 4:6.

கர்த்தராகிய தேவன் பெருமையுள்ளவர்களுடைய ஜெபத்தை கேட்கவே மாட்டார். "மற்றவர்களை விட நான் பெரியவன்! நான் பெரிய பெரிய காரியங்களைச் செய்கிறேன்!" என்கிற பெருமை நமக்கு வேண்டவே வேண்டாம்.

உங்களுக்கு வேலை கிடைத்திருக்கிறதா? அது கர்த்தராகிய தேவனுடைய கிருபை! உங்களுக்கு ஒரு தொழில் இருக்கிறதா? அது தேவனுடைய கிருபை! உங்களுக்கு நல்லதொரு குடும்பத்தையும், பிள்ளைகளையும் கர்த்தராகிய தேவன் கொடுத்திருக்கிறாரா? அது அவருடைய அனாதி கிருபை! உங்களுக்கு ஒரு ஊழியம் இருக்கிறதா? அது அவருடைய கிருபையே அல்லாமல், வேறொன்றுமில்லை! மொத்தத்தில், எல்லாமே கர்த்தராகிய தேவனுடைய சுத்தக் கிருபை! கிருபை! கிருபை!

ஆகவே, கர்த்தராகிய தேவனுக்கு முன்பாக உங்களைத் தாழ்த்தி, அவருடைய வாக்குத்தத்தத்தைச் சொல்லி கருத்தாக நாம் ஜெபிக்கும்போது, அவர் அற்புதம் செய்து விடுவார். எனவே, **கர்த்தராகிய தேவாதி தேவன் எதிர்த்து நிற்கிற பெருமைக்கு ஒருபோதும் இடம் கொடுத்து விடாதிருங்கள்.**

உங்களுடைய வீட்டிற்குள் கூட பெருமைக்கு இடம் கொடுக்காதிருங்கள். வயதான காலத்தில் சிலர் தங்கள் மருமக்களிடம் பேசும்போது, "என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? நான் அந்தக் காலத்தில் எவ்வளவு நகைகளைப் போட்டுக் கொண்டு வந்தேன் தெரியுமா? எங்கள் குடும்பம் எப்படிப்பட்டது தெரியுமா?" என்று பெருமையாகப் பேசி திட்டுவதைக் கேட்டிருப்போம்.

பாருங்கள், எத்தனை வயதானாலும், அவர்களை விட்டு அந்தப் பெருமை போகவில்லையே! அப்படிப்பட்டவர்களை கர்த்தராகிய தேவன் எப்படி ஆசீர்வதிக்க முடியும்? ஆகவே, **ஒருவேளை உங்கள் உள்ளத்திற்குள் பெருமை இருக்குமானால், இன்றைக்கே அதை எடுத்துப் போட்டு விடுங்கள்.**

'குடும்பப் பெருமை!', 'ஜாதிப் பெருமை!', 'பணப் பெருமை!' என்று சொல்லி, எந்தவொரு பெருமையும் **நமக்கு வேண்டவே வேண்டாம்.** "எதுவானாலும், அது கர்த்தராகிய தேவன் கொடுத்த கிருபை! அவருடைய இரக்கம்!" என்பதை மறந்து விடாமல், உங்களை அவருக்கு முன்பாக தாழ்த்தி ஜெபியுங்கள். **அவர் உங்களுக்கு அற்புதம் செய்து விடுவார்!** நீங்கள் இழந்து போனதை கட்டாயம் உங்களுக்குத் திரும்பத் தந்து விடுவார்!

கர்த்தராகிய தேவனுக்கு முன்பாக உங்களை தாழ்த்தி விட்டீர்கள் என்றால், உடனே அவர் உங்களுக்கு இரங்கி விடுவார்! உங்களுக்கு தம்முடைய அளவில்லாத கிருபையைக் கொடுத்து விடுவார்! ஆகவே, அவருக்கு முன்பாக **உங்களை தாழ்த்தி, வாக்குத்தத்தத்தை விசுவாசித்து** ஜெபியுங்கள். கர்த்தர் உங்களுக்கு அற்புதங்களைச் செய்து, உங்களை ஆசீர்வதிப்பார்!

## மனந்திறந்து சொல்லி ஜெபியுங்கள்!

பக்தனாகிய யாக்கோபு, "என் சகோதரனாகிய **ஏசாவின் கைக்கு என்னைத் தப்புவியும், அவன் வந்து என்னையும் பிள்ளைகளையும் தாய்மார்களையும் முறிய அடிப்பான் என்று அவனுக்கு நான் பயந்திருக்கிறேன்.**" (ஆதி. 32:11) என்று சொல்லி ஜெபித்தார்.

யாக்கோபு, தன் உடன் பிறந்த சகோதரனாகிய **ஏசா** கோபத்தோடு தன்னை எதிர்த்து வருவதை அறிந்து பயந்தார். காரணம், 20 வருடத்திற்கு முன்பாக, தான் அவரை ஏமாற்றியதை நினைத்து, "அவன் என்னைக் கொன்று போட்டு விடுவானோ?" என்று எண்ணி மிகவும் பயந்தார்.

பாருங்கள், யாக்கோபு கர்த்தராகிய தேவனை தரிசித்தவர்! அவரிடத்தில் எத்தனையோ வாக்குத்தத்தங்களைப் பெற்றவர்! சர்வ வல்லமையுள்ள தேவாதி தேவனோடு உடன்படிக்கை பண்ணியவர்தான்! என்றாலும், "என்னை யாரும் அசைக்க முடியாது!" என்று பெருமையாக அவர் நினைக்கவில்லை. தேவ சமூகத்தில், தன்னுடைய உள்ளத்தில் இருக்கிற பயத்தை மனந்திறந்து சொல்லி, ஜெபித்தார்.

எனக்கு அன்பானவர்களே, நீங்களும் **உங்கள் உள்ளத்தில் உள்ளதை கர்த்தராகிய தேவனிடத்தில் மனந்திறந்து சொல்லி ஜெபியுங்கள்.** அதைத்தான் கர்த்தராகிய தேவன் நம்மிடத்தில் எதிர்பார்க்கிறார்.

உங்கள் மனதில் என்ன நினைக்கிறீர்களோ, அதையெல்லாம் கர்த்தராகிய தேவனிடத்தில் மனந்திறந்து சொல்லி நீங்கள் ஜெபிக்கலாம்.



**எனக்கு சில காரியங்களைக் குறித்து பயம் உண்டானால், நான் கர்த்தராகிய** தேவனுடைய சமூகத்தில் போய், "ஆண்டவரே, இந்தக் காரியத்தை நினைத்தால், எனக்கு பயமாக **இருக்கிறது!** எனக்கு உதவி **செய்யும். இந்தக் காரியத்தை** நினைத்தால், **எனக்கு மனச் சோர்வு** வருகிறது! எனக்கு **உதவி செய்யும்." என்று** சொல்லி ஜெபிப்பேன்.

**சில சமயங்களில், என்னால் ஜெபிக்க முடியாத அளவிற்கு பல பிரச்சனைகள் வந்து என்னை நெருக்கும்போது, நான் என்ன நினைக்கிறேனோ, அவைகள் எல்லாவற்றையும் மனந்திறந்து கர்த்தராகிய தேவனிடத்தில் சொல்லி ஜெபிப்பேன்.**

மனிதர்களிடத்தில் பேசும்போது, **தயவு செய்து அவிசுவாசமான வார்த்தைகளைப் பேசாதீர்கள்.** மிகுந்த தைரியத்தோடு கூட, "கர்த்தராகிய இயேசு கிறிஸ்து என்னோடு கூட இருக்கிறார்! அவர் என்னை நடத்துவார்! நான் எதற்கும் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை!" என்று சொல்லுங்கள்.

தேவ சமூகத்தில் போய் ஒருபோதும் வீரம் பேசாதிருங்கள். சிருஷ்டி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு நம்மைப் பற்றி எதுவும் தெரியாதா? இந்த உலகத்தில் அவருக்குத் தெரியாதது என்று, அப்படி என்னதான் இருக்க முடியும்? அவர் நம்மைப் பார்த்து, "மகனே(ளே), நீ உள்ளத்திற்குள் பயந்து கொண்டிருப்பது எனக்குத் தெரியும்! உன்னைப் பற்றி நான் எல்லாம் அறிந்திருக்கிறேன்! உன் பெலன் என்ன? உன் பெலவீனம் என்ன? என்று எனக்கு நன்றாகவே தெரியும்! நீ சோர்ந்து போயிருப்பது எனக்குத் தெரியும்! நீ பயந்து கொண்டிருப்பதும் எனக்குத் தெரியும்! அவைகளை எல்லாம் மறைத்து, ஏன் என்னிடத்தில் வீரம் பேசுகிறாய்?" என்று சொல்லி வருத்தப்படுவார்.

**எப்போதுமே விசுவாச வார்த்தைகளையே பேசுங்கள்.** ஜெபத்திற்காக கர்த்தராகிய தேவனுடைய **சமூகத்திற்குப் போகும் போதெல்லாம் மனந்திறந்து பேசுங்கள்.** "கர்த்தாவே, நான் எல்லாவற்றையும் இழந்து விட்டேன்!

அவமானத்திற்கு மத்தியில் இருக்கிறேன்! என் மனதிற்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது! நிம்மதியாகத் தூங்க முடியவில்லை! பல காரியங்களை நினைத்து, நினைத்து, மன அழுத்தத்திற்கு உள்ளாகி இருக்கிறேன்! எனக்கு உதவி செய்யும் ஆண்டவரே!" என்று சொல்லி, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடத்தில் மனந்திறந்து பேசுங்கள்.

அப்படிப் பேசுவது அவிசுவாசம் கிடையாது. நம்முடைய தகப்பனோடு உரிமையோடு மனந்திறந்து பேசுவது எவ்வளவு பெரிய பாக்கியம்!

ஒரு தகப்பனார், தன்னுடைய அனுபவத்தை இப்படியாக எழுதி எனக்கு அனுப்பி இருந்தார். அவர் மத்திய அரசாங்கத்தில் நல்ல ஒரு பொறுப்பான பதவியில் இருக்கிறார். ஒரு நல்ல வேலையில் இருந்தாலே சுற்றிலும் இருக்கிறவர்கள் கொஞ்சம் பொறாமையாகப் பார்ப்பார்கள் அல்லவா?

"இவனை எப்படியாவது ஒழித்து விட வேண்டும்! இவனுடைய ஆசீர்வாதத்தைப் பிடுங்கி விட வேண்டும்!" என்று திட்டம் தீட்டி, வேண்டுமென்றே பிரச்சனைகளை உருவாக்கி, அவருடைய பதவியை இழக்கச் செய்து விட்டார்கள்! 'இனி என்ன ஆகும்?' என்று அவருக்குத் தெரியாது! மூன்று, நான்கு மாதங்கள் கடந்து விட்டன.

வேலையை இழந்து விட்டார்! அவமானம்! நிந்தை! அவரோடு கூட இருந்தவர்களே அவரை மிகுந்த ஏளனமாகப் பேசியபடியினால் மனமுடைந்து போனார். இரவில் நிம்மதியாக அவரால் தூங்க முடியவில்லை. வீட்டில் யாரிடத்திலாவது சொன்னால், 'அவர்களும் சோர்ந்து போய் விடுவார்களே! வருத்தப்பட்டு விடுவார்களே!" என்று எண்ணி, யாரிடத்திலும் சொல்லவும் இல்லை.

"நான் வேலையை இழந்து விட்டேன்! மனதளவில் சமாதானத்தையும், நம்பிக்கையையும் இழந்து விட்டேன்! அதனால் தூக்கத்தையும் இழந்து, மன அழுத்தமாகவும் இருக்கிறது. என்ன செய்வது?" என்று அவர் கலங்கிக் கொண்டிருந்த சமயத்தில் ஒருநாள், நம்முடைய 'இயேசு விடுவிக்கிறார்' தொலைக்காட்சி நிகழ்ச்சியை பார்த்திருக்கிறார்.

அதில் நான் தேவ செய்தியைக் கொடுத்துக் கொண்டிருந்தபோது, "எந்த இடத்தில் நீங்கள் அவமானப்பட்டுப் போனீர்களோ, அதே இடத்தில் கர்த்தராகிய தேவன் உங்களை உயர்த்தி, கனப்படுத்துவார்!" என்று சொன்ன வார்த்தை கர்த்தராகிய தேவன் அவரோடு பேசியதைப்போல இருந்தது. அதை அப்படியே பிடித்துக் கொண்டார்.



**கர்த்தராகிய இயேசு கிறிஸ்து, "மகளே(னே), உனக்கு நான் இருக்கிறேன்." என்று சொல்லி, நம்மை அணைத்துக் கொள்வார்.**

தினந்தோறும் தேவ சமூகத்தில் போய், அந்த வார்த்தையைச் சொல்லி, "கர்த்தாவே, எந்த இடத்தில் நான் அவமானப்படுத்தப்பட்டுப் போனேனோ, அதே இடத்தில் என்னை உயர்த்துவீர்! எங்கே நான் வேலையை இழந்தேனோ, அதே இடத்தில் எனக்கு மறுபடியும் வேலை தருவீர் என்று நான் விசுவாசிக்கிறேன்..." என்று சொல்லி தொடர்ந்து ஜெபித்தார்.

பாருங்கள், அந்த சமயத்தில் சூழ்நிலைகள் எல்லாம் அவருக்கு எதிர்மாறாகத்தான் இருந்தது. இனி அவருக்கு வாய்ப்பே இல்லை! ஆனாலும் கர்த்தராகிய தேவனுடைய வாக்குத்தத்தத்தை அவர் விசுவாசித்து, தன்னுடைய குடும்பம், கஷ்டம், மன அழுத்தம், தூங்க முடியாமல் கஷ்டப்படுகிற நிலைமைகளை எல்லாம் மனந்திறந்து சொல்லி ஜெபித்தார்.

கர்த்தராகிய தேவன் அவருடைய ஜெபத்தைக் கேட்டார். அவர் வேலையை இழந்த நான்காவது மாதத்தில், அதே இடத்தில் திரும்பவும் அந்த வேலையை அவருக்குக் கிடைக்கப் பண்ணி, எல்லோருக்கும் மத்தியில் கெம்பீரமாக அவரை நிற்கப் பண்ணினார்.

எந்த இடத்தில் அவர் வேலையை இழந்து அவமானப்பட்டாரோ, அதே இடத்தில், கர்த்தராகிய தேவன் அவரை உட்கார வைத்து, எல்லோருக்கும் மத்தியில் அவரை கனப்படுத்தி உயர்த்தினார்.

எனக்கு அன்பானவர்களே, எவ்வளவு அற்புதமான கர்த்தராகிய தேவன் ஒருவர் நமக்கு இருக்கிறார், பாருங்கள்!

ஏன் கலங்குகிறீர்கள்? ஏன் பயப்படுகிறீர்கள்?

**கலங்காதீர்கள்! பயப்படாதீர்கள்!** வாக்குக் கொடுத்த கர்த்தராகிய தேவன், அதை உங்களுக்கு நிறைவேற்றித் தருகிறவராக இருக்கிறார்! "நீ இழந்து போனதையெல்லாம் உனக்குத் தருவேன் மகளே(னே)!" என்று சொன்ன கர்த்தராகிய தேவன் ஒருவர் இருக்கிறார் அல்லவா? அவரைப் பிடித்துக் கொள்ளுங்கள். அவரிடம் மனந்திறந்து பேசுங்கள்.

உங்களால் ஜெபிக்க முடியவில்லையா? **கவலையே படாதிருங்கள்.** அதையும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடத்தில் மனந்திறந்து சொல்லுங்கள். "என்னால் ஜெபம் பண்ணக் கூட முடியவில்லை ஆண்டவரே! என்னால் தூங்க முடியவில்லை! என்னால் நிம்மதியாக இருக்கவே முடியவில்லை! என் மனதிற்குள் இவ்வளவு பாரம் இருக்கிறதே! நான் எல்லாவற்றையும் இழந்து விட்டேனே! உம்முடைய வாக்குத்தத்தத்தை நான் விசுவாசிக்கிறேன். எனக்கு உதவி செய்யும் ஆண்டவரே!" என்று மனந்திறந்து அவரிடத்தில் சொல்லுங்கள்.

அவ்வளவுதான்! அவர் எல்லாவற்றையும் புரிந்து கொண்டு, அற்புதமாக உங்களை நடத்துவார்!

எனக்கு அன்பானவர்களே, நம்முடைய கர்த்தராகிய தேவன் எவ்வளவு நல்லவர் தெரியுமா? நம்மை தவறாகவே நினைக்க மாட்டார். நீங்கள் என்ன சொன்னாலும், அதை அமைதியாகக் கேட்டு, "மகளே(னே), உனக்கு நான் இருக்கிறேன்." என்று சொல்லி, நம்மை அணைத்துக் கொண்டு நமக்கு உதவி செய்வார்.

அவர் எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்கிற நம்முடைய நல்ல தகப்பன்! உங்களை நேசிக்கிற தாயும், சினேகிதனும், எல்லாமுமே அவர் ஒருவர்தான்! **அவர் ஒருவர்தான் உங்களை முழுவதுமாக விளங்கிக் கொள்கிறவர்!**

அவர் வாக்குத்தத்தங்களின் தேவன்! வாக்கு மாறாத தேவன்! சொல் தவறாத தேவன்! தான் சொன்னதை செய்து முடிக்கிற தேவன்! **அவருடைய வாக்குத்தத்தத்தை விசுவாசித்து, மனந்திறந்து அவரோடு பேசி, ஜெபியுங்கள்.** அவர் உங்களுக்கு அற்புதங்களைச் செய்து, உங்களை ஆசீர்வதித்து, உயர்த்துவார்!

விசுவாசத்தோடு இந்த ஜெபத்தை ஏறெடுங்கள்!



கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே, எனக்காக நீர் சிலுவையில் தொங்கி, உம்முடைய சொந்த இரத்தத்தைச் சிந்தி, பெலனை எல்லாம் இழந்து, மரித்து உயிர்த்தெழுந்தீரே, உமக்கு ஸ்தோத்திரம்!

நீர் எனக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்திற்காக, உமக்கு ஸ்தோத்திரம்! அதை நான் விசுவாசிக்கிறேன்! எனக்குள்ளே இருக்கிற பெருமையை நீர் எடுத்துப் போட்டு, என் ஜெபத்தைக் கேளும்!

என் பிரச்சனைகளையும், பாடுகளையும், வேதனைகளையும் மனந்திறந்து உம்மிடத்தில் நான் சொல்கிறேன்!

நான் அவமானப்பட்டு நிற்கிற இடத்தில், என்னை தலை நிமிர்ந்து நடக்கப் பண்ணுவீராக!

என்னை உள்ளபடியே புரிந்து கொண்டிருக்கிற நல்ல தகப்பனே, என் பிரச்சனைகளை மாற்றி, நான் இழந்து போனதை எல்லாவற்றையும் எனக்கு திரும்பத் தந்து, என் கண்ணீரைத் துடைத்தருளுவீராக!

நீர் ஒருவரே சொன்னதைச் செய்கிற தேவன் என்பதை எனக்கு விளங்கப் பண்ணுவீராக!

உம்முடைய கிருபையினால் என்னை இடைக்கட்டி, என்னை ஆசீர்வதிப்பீராக!

உம்முடைய நாமத்தினால் அற்புதங்களை நான் எதிர்பார்க்கிறேன்!

இயேசு கிறிஸ்துவின் நாமத்தில், ஆமென்! ஆமென்!



# பண்டிகை நாட்களில், ஏழை-எளிய மக்களுக்கு வெளிப்படுத்தப்பட்ட இயேசு கிறிஸ்துவின் அன்பு!

மனுக் குலத்தை இரட்சிக்கும்படியாக, இந்த பூமியில் அவதரித்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் அன்பை ஜனங்களுக்கு வெளிப்படுத்தும்படியாக, நமது 'இயேசு விடுவிக்கிறார்' ஊழியங்கள், "புது வாழ்வு அறக் கட்டளை' மற்றும் 'நல்ல சமாரியன் கிளப்' மூலமாக, கடந்த 2020ம் வருடமும் கிறிஸ்துமஸ் பண்டிகை நாட்களில் ஏராளமான ஏழை-எளிய மக்களுக்கு அனேக உதவிகளைச் செய்ய, கர்த்தராகிய தேவன் கிருபை செய்தார். அவருக்கே மகிமை உண்டாவதாக!

## 'பெதஸ்தா' இலவச மருத்துவமனை!

நமது **'பெதஸ்தா' இலவச மருத்துவமனையி**ல், கடந்த டிச. 11ம் தேதியன்று நடைபெற்ற **கிறிஸ்துமஸ் நிகழ்ச்சி**யின் மூலமாக, சுமார் **300 வியாதியஸ்தர்களுக்கு** கிறிஸ்து பிறப்பின் நற்செய்தியை அறிவித்து, கிறிஸ்துமஸ் **கேக், புத்தாடைகள்** மற்றும் **போர்வைகள்** வழங்கப்பட்டது.

## புது வாழ்வு குழந்தைகள் வளர்ச்சி மையம்!



நமது **புது வாழ்வு குழந்தைகள் வளர்ச்சி மையம்** மூலமாகப் பயனடைந்து வருகிற சுமார் **250 சிறு பிள்ளைக**ள் மற்றும் அவர்களுடைய குடும்பத்தினருக்காக, கடந்த டிச. 12ம் தேதியன்று, நாலுமாவடி - 'தேவனுடைய பேழை'யில் வைத்து, **கிறிஸ்துமஸ் கொண்டாட்டம்** நடத்தப்பட்டது.

இந்த விழாவில், இந்த மையத்தின் மூலமாகப் பயனடைந்து வருகிற சிறு பிள்ளைகளின் **கலை நிகழ்ச்சி**கள் நடைபெற்றது. அனைத்து சிறு பிள்ளைகளுக்கும் **புத்தாடை**களும், **கிறிஸ்துமஸ் விருந்து**ம் வழங்கப்பட்டது.

## பேய்குளம்-தொழு நோயாளிகளுக்கு...

கடந்த டிச. 19ம் தேதியன்று, **பேய்குளம்**-புனித லூக்கா **தொழு நோய் மருத்துவமனையி**ல் இருக்கிற சுமார் **150**க்கும் அதிகமான தொழு நோயாளிகள் மற்றும் அவர்களுடைய குடும்பத்தினருக்கு, **சகோ. S. சாம் ஜெபராஜ்** அவர்கள் கிறிஸ்து பிறப்பின் நற்செய்தியை அறிவித்து, **புத்தாடைகள்** வழங்கினார்கள். சிறப்பான **கிறிஸ்துமஸ் விருந்து**ம் அளிக்கப்பட்டது.




## மாற்றுத் திறனாளிகள் மற்றும் தர்மம் எடுத்துப் பிழைப்போருக்கு...

கடந்த டிச. 21 தேதியன்று, நாலுமாவடி-தேவனுடைய கூடாரத்தில் வைத்து, காலை 9:00 - மதியம் 1:00 வரை, மாற்றுத் திறனாளிகள், **நரிக் குறவர்கள்** மற்றும் **தர்மம் எடுத்துப் பிழைப்பவர்களுக் கான சிறப்பு கிறிஸ்துமஸ் விழா** நடத்தப்பட்டது.



இந்த விழாவில், நமது **சகோ. மோகன் சி. லாசரஸ்** மற்றும் அவரது துணைவியார் **சகோதரி ஜாய்ஸ் லாசரஸ்** அவர்கள், சுமார் **150** மாற்றுத் திறனாளிகளுக்கு **மூன்று சக்கர வண்டி, சக்கர நாற்காலி, ஊன்று கோல், செயற்கை கை-கால்** மற்றும் **பார்வை அற்றவர்களுக்கான உபகரணங்கள்** வழங்கினார்கள்.


சகோதரி ஜாய்ஸ் லாசரஸ்

இந்த விழாவில் பங்கு பெற்ற சுமார் **2,500**க்கும் அதிகமான **மாற்றுத் திறனாளிகள், தர்மம் எடுத்து பிழைப்போருக்கு கிறிஸ்துமஸ் நற்செய்தி** அறிவிக்கப்பட்டு, அனைவருக்கும் சிறப்பான **உணவும், புத்தாடை**களும் வழங்கப்பட்டது.

மேலும், இந்த விழாவில் நடத்தப்பட்ட **கிறிஸ்துமஸ் கலை நிகழ்ச்சி**யின் மூலமாக கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் அன்பு வெளிப்படுத்தப்பட்டது.

## ஏழை-எளிய மக்களுக்கு கிறிஸ்துமஸ் விழா!

கடந்த டிச. 21ம் தேதியன்று, நாலுமாவடி கிராமத்தைச் சுற்றியுள்ள அனேக கிராமங்களிலுள்ள சுமார் **2,600**க்கும் அதிகமான ஏழை-எளிய மக்களுக்கு, நமது சகோதரர் **மோகன் சி. லாசரஸ்** அவர்கள் கிறிஸ்து பிறப்பின் நற்செய்தியை அறிவித்து, **புத்தாடை**களும், கிறிஸ்துமஸ் கேக்கும் வழங்கினார்கள்.



## கிராமங்களுக்கு கிறிஸ்து பிறப்பின் நற்செய்தி!

கடந்த டிச. 21ம் தேதியன்று, நாலுமாவடி கிராமத்திற்கு அருகிலுள்ள, **'குருகாட்டூர்'** என்கிற ஒரு கிராமத்தில், **சிறப்பு கிறிஸ்துமஸ் விழா** நடத்தப்பட்டது. இந்த விழாவில் கலந்து கொண்ட ஏராளமான **புற ஜாதி மக்களுக்கு** நமது சகோதரர் அவர்கள் **கிறிஸ்துவின் நற்செய்தி**யை அறிவித்தார்கள். வந்திருந்த அனைவருக்கும் சிறப்பான **கிறிஸ்துமஸ் விருந்தும்** வழங்கப்பட்டது.



## புது வாழ்வு சுய உதவிக் குழுவினர் மற்றும் விதவைகளுக்கு...

**ஜெப மலை**-கீழ மாதபுரத்தைச் சுற்றியுள்ள கிராமங்களில் நமது புது வாழ்வு சங்கத்தின் மூலமாக செயல்பட்டு வருகிற, சுமார் **150**க்கும் மேற்பட்ட **சுய நல உதவிக் குழுக்களிலுள்ள** சுமார் **340** பேர்களுக்கு **(விதவைகள் மற்றும் அவர்களது குழந்தைகள்)** கடந்த டிச. 23ம் தேதியன்று, கிறிஸ்துமஸ் **புத்தாடை**கள் மற்றும் **கேக்** வழங்கப்பட்டது. மேலும், **கிறிஸ்துமஸ் கலை நிகழ்ச்சி**களை நடத்தி, அதன் மூலமாக கிறிஸ்துவின் அன்பு வெளிப்படுத்தப்பட்டது.



## திருநங்கையருக்கான கிறிஸ்துமஸ் சிறப்பு நிகழ்ச்சி!

கடந்த டிச. 24ம் தேதியன்று, நமது தேவனுடைய கூடாரத்தில் வைத்து, **திருநங்கையருக்கான கிறிஸ்துமஸ் சிறப்பு நிகழ்ச்சி** நடத்தப்பட்டது. இதில், தூத்துக்குடி மாவட்டத்திலுள்ள ஏராளமான திருநங்கையர்கள் பங்கு பெற்று, தேவாசீர்வாதத்தைப் பெற்றுக் கொண்டார்கள். திருநங்கை **எஸ்தர் பாரதி** அவர்கள் சிறப்பு **கிறிஸ்துமஸ் செய்தி**யைப் பகிர்ந்து கொண்டார்கள். இந்த கிறிஸ்துமஸ் சிறப்பு நிகழ்ச்சியில்



கலந்து கொண்ட அனைவருக்கும் **புத்தாடைகள், கிறிஸ்துமஸ் வெகுமதி,** கிறிஸ்துமஸ் **விருந்து** மற்றும் **கேக்** வழங்கப்பட்டது.

## கிறிஸ்துமஸ்–'அன்பின் விருந்து!'

டிச. 25ம் தேதி **கிறிஸ்துமஸ் தினத்தன்று**, நாலுமாவடி மற்றும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களைச் சார்ந்த சுமார் **2,000**க்கும் அதிகமான ஏழை–எளிய மக்களுக்கு **சுவையான உணவு** வழங்கப்பட்டது. நமது சகோதரர் **மோகன் சி. லாசரஸ்** அவர்கள், வந்திருந்த ஜனங்களை **மிகுந்த கனிவோடு விசாரித்து**, அவர்களுக்கு **உணவு பரிமாறி**, அவர்களுக்காக ஜெபித்து, இயேசு கிறிஸ்துவின் அன்பை வெளிப்படுத்தியதோடு, வந்திருந்த எல்லா **சிறு பிள்ளைகளுக்கும் பரிசுகளை** வழங்கி, அவர்களையும் சந்தோஷப்படுத்தினார்கள்.



## குட் சமாரிட்டன் கிளப்!

பல பட்டணங்களில் செயல்பட்டு வருகிற **64 குட் சமாரிட்டன் கிளப்கள்** மூலமாக, எண்ணற்ற ஏழை–எளிய மக்களுக்கு கிறிஸ்துமஸ் நலத் திட்டப் பணிகள் செயல்படுத்தப்பட்டு, இயேசு கிறிஸ்துவின் அன்பு வெளிப்படுத்தப்பட்டது.




## 'குட் சமாரிட்டன் கிளப்' மூலமாக செய்யப்பட்ட கிறிஸ்துமஸ் உதவிகள்!

- ஏழை–எளிய மக்களுக்கு **புத்தாடைகள்** மற்றும் **கிறிஸ்துமஸ் பரிசுகள்**!
- சிறு பிள்ளைகள் மற்றும் முதியோர் **காப்பகங்களுக்கு உதவிகள்**!
- பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கு **கல்விக்கான பொருட்கள்** மற்றும் **உதவித் தொகைகள்**!
- **ஊனமுற்றோர், விதவைகளுக்கு புத்தாடைகள்** மற்றும் **கிறிஸ்துமஸ் விருந்து**!

கடந்த 2020ம் வருட பண்டிகைக் காலங்களில், நம்முடைய 'குட் சமாரிட்டன் கிளப்' (GSC) சார்பாக, **ஏராளமான நலத் திட்ட உதவிகளைச்** செய்ய கர்த்தர் கிருபை பாராட்டினார்.

**இவைகள் அனைத்தும் உங்களது உதாரத்துவமான காணிக்கையினாலும், பாரமுள்ள ஜெபத்தினாலும் மட்டுமே சாத்தியமாகிறது. இதற்குக் காரணமாக இருக்கிற உங்களை கர்த்தராகிய தேவன் நினைத்தருளி, ஆயிரம் மடங்கு ஆசீர்வதிப்பாராக!**

**தொடர்ந்து, இப்படிப்பட்ட உன்னதமான கர்த்தருடைய நலத் திட்டப் பணிகளுக்கு நீங்கள் உதவ விரும்பினால், கீழ்கண்ட முகவரியில் எங்களோடு தொடர்பு கொள்ளுங்கள். – ஒருங்கிணைப்பாளர்.**

### உங்கள் நன்கொடைகளை அனுப்ப...

| இந்தியாவில் உள்ளவர்களுக்கு... | |
|---|---|
| A/c Name: | NEW LIFE SOCIETY |
| A/c No: | 054100710400513 |
| Bank: | TAMILNAD MERCANTILE BANK LTD., |
| Branch: | Prahasapuram, Nazareth |
| Branch Code: | 000054 |
| IFS Code: | TMBL0000054 |
| MICR Code | 627060021 |
| SWIFT Code: | TMBLINBBTUT |

**குறிப்பு: வெளி நாடுகளில் வசிக்கிற தேவ பிள்ளைகள், இந்த நலத் திட்டப் பணிகளுக்கு நன்கொடைகளை அனுப்ப ஏவப்பட்டால், +91 890 383 5315 என்கிற எண்ணில் தொடர்பு கொள்ளுங்கள்.**




ADDRESS: NEW LIFE SOCIETY, Main Road, Nalumavadi-628 211, Thoothukudi Dt., India.
Ph: 890 383 5315. Web: www.newlifesociety.in Email: info@newlifesociety.in





# எழுப்புதல் மையம்! தேவனுடைய கூடாரம்!

கர்த்தராகிய தேவன் நாலுமாவடியில் கட்டி வருகிற இந்த **தேவனுடைய கூடாரம், கடைசிக் கால எழுப்புதல் மையம்!** தன்னுடைய எழுப்புதல் திட்டங்களை நிறைவேற்றவே, கர்த்தராகிய தேவன் இந்த தேவனுடைய கூடாரத்தைக் கட்டி வருகிறார்.

எழுப்புதலுக்காக திரள் கூட்ட மக்களை இங்கிருந்து ஆயத்தப்படுத்தி, கர்த்தர் எழுப்பிக் கொண்டிருக்கிறார். வருகிற நாட்களில், இந்தியா முழுவதிலுமிருந்து திரளான வாலிபர்கள் இங்கு வந்து எழுப்புதலுக்காக ஆயத்தமாகி, '**சேனை**'யாகப் புறப்படப் போகிறார்கள்! இந்த வருடத்தில், அது மிகத் தீவிரமாக நடக்கப் போகிறது!

கர்த்தருக்காக எழுப்புதல் திட்டங்களை நிறைவேற்ற, அனேக வாலிபர்களும், சிறு பிள்ளைகளும், பெண்களும் இங்கு வந்து பயிற்சி எடுக்கப் போகிறார்கள். இதற்கான ஆயத்தங்கள் வேகமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

முதல் கட்டமாக கடந்த (2021) ஜன. 14,15,16 தேதிகளிலும், 2ம் கட்டமாக ஜன. 25,26,27 தேதிகளிலும் நடத்தப்பட்ட, **வாலிபர்களுக்கான எழுப்புதலை பரவச் செய்வோர் பயிற்சி முகாம் (IGNITE - 2021)** மூலமாக, சுமார் **3,500**க்கும் அதிகமானோர் பயிற்சி பெற்று, '**சேனை**'யாகப் புறப்பட்டுச் சென்றிருக்கிறார்கள். கர்த்தராகிய தேவனுக்கு ஸ்தோத்திரம்!

அடுத்தபடியாக, வட இந்தியாவிலிருந்தும், உலக நாடுகளிலிருந்தும் எழுப்புதல் அக்கினியைப் பரவச் செய்ய வாலிபர்கள் ஆயத்தப்படுத்தப்பட



இருக்கிறார்கள். இப்படியாக, **எழுப்புதலுக்கான தேவ திட்டங்களை நிறைவேற்றத்தான் இந்த தேவனுடைய கூடாரம்.**

சீக்கிரத்தில் **திறப்பின் வாசல் ஜெபத்தையும்,** (வியாழன்தோறும்) **அற்புத விடுதலைப் பிரார்த்தனை** கூட்டங்களையும் நடத்த, கர்த்தராகிய தேவன் வழியை உண்டாக்குவார். இதற்காக **ஜெபியுங்கள். இந்த** வருடத்திற்குள் தேவனுடைய கூடாரம் முழுமையாகக் கட்டி முடிக்கப்பட வேண்டும். இதற்காக **விசேஷமாக ஜெபியுங்கள்.**

இதுவரை தியாகத்தோடு நீங்கள் அனுப்பிய காணிக்கையினாலும், ஜெபத்தினாலும்தான் இம்மட்டும் தேவனுடைய கூடாரம் கட்டி எழுப்பப்பட்டு வந்திருக்கிறது. **இந்த வருடத்திற்குள் கட்டி முடிக்கப்பட,** கர்த்தர் உங்கள் உள்ளத்தில் **ஏவுகிறபடியே** உங்கள் பங்**குகளை அனுப்பலாம்.** கர்த்தராகிய தேவன், தான் வாக்குக் கொடுத்தபடியே, கொடுத்துத் தாங்குகிற உங்களை நிரம்பி வழியும்படி ஆசீர்வதிப்பாராக!

இந்த தேவனுடைய கூடாரக் கட்டுமானப் பணிக்காக, காணிக்கை அனுப்ப நீங்கள் ஏவப்பட்டால், M.O., மூலமாக அனுப்பலாம். D.D., அல்லது Cheque மூலமாக அனுப்புவதாக இருந்தால், 'Tabernacle of God' என்கிற பெயரில், கீழ்கண்ட எமது முகவரிக்கு அனுப்பலாம். அல்லது, இங்கே கொடுக்கப்பட்டுள்ள எமது வங்கிக் கணக்கில் நேரடியாக உங்கள் காணிக்கையைச் செலுத்தி விட்டு, அதற்குரிய Challanஐ எங்களுக்கு அனுப்பி வையுங்கள்.

அல்லது, அதைக் குறித்த விபரங்களை **890 38 35 315** என்கிற எண்ணில் தொடர்பு கொண்டு, எங்களுக்குத் தெரியப்படுத்துங்கள். - **உங்கள் சகோதரன்.**

### காணிக்கை அனுப்ப...

| | |
|---|---|
| A/c Name: | Tabernacle of GOD |
| A/c No: | 0541 503 108 750 29 |
| Bank: | Tamilnad Mercantile Bank Ltd., |
| Branch: | Prahasapuram, Nazareth. |
| Branch Code: | 054 |
| IFS Code: | TMBL 0000054 |
| MICR Code: | 6270 600 21 |
| SWIFT Code: | TMBLINBBTUT |

**Online Donation: www.jesusredeems.com/donation.php**

Address: Tabernacle of God, Jesus Redeems, Nalumavadi - 628 211, Thoothukudi Dt., T.N., Toll Free: 1800 425 5315.



# இயேசுவும், நானும்!

## Jesus & Myself!

கடந்த (2021) ஜனவரி மாத இதழில், "எத்தனை வருடங்களாக இந்தப் பழக்கத்தை நீங்கள் கடைப்பிடித்து வருகிறீர்கள்?" என்று, நமது சகோதரர் அவர்களிடத்தில் கேட்டபோது... "நான் இதை பல வருடங்களாகச் செய்து வருகிறேன். இப்படியாக நாம் ஜெபிக்கும்போது, நம்முடைய விசுவாசம் பெலப்படும். சில வேளைகளில், ஊழியத்தில் சில தேவைகள் வரும்போது, "தேவைகள் இவ்வளவு பெரிதாக இருக்கிறதே! என்ன செய்வது?" என்று நான் யோசித்தது உண்டு." என்று சொன்னதாக வாசித்து முடித்திருப்பீர்கள்.

இதோ, அதன் தொடர்ச்சி...

அதற்கு கர்த்தராகிய தேவன், "இதற்கு முன்பாக நான் உன் ஜெபங்களுக்குப் பதில் கொடுத்ததை எல்லாம் கொஞ்சம் ஞாபகப்படுத்திப் பார்!" என்று சொல்வார். உடனே நான் அதை நினைத்துப் பார்க்கும்போது, இவைகளை விட பெரிய பெரிய காரியங்களை எல்லாம் கர்த்தராகிய தேவன் எனக்கு வாய்க்கப் பண்ணி இருப்பதை என்னால் உணர முடியும்!

அந்த சமயத்தில், "கர்த்தராகிய தேவன் எனக்கு எவ்வளவு பெரிய அற்புதங்களை எல்லாம் செய்திருக்கிறார்! இது என்ன அப்படியொரு பெரிய காரியம்? சின்னக் காரியம்தானே?" என்று யோசிக்கும்போது, என்னுடைய விசுவாசம் பெலப்பட்டு, ஜெபத்தில் எனக்கொரு உற்சாகம் வந்து விடும்!

நாம் ஜெபிக்கும்போது, "சும்மா யாரோ சாதாரணமான ஒரு நபரிடம் நாம் உறவாடிக் கொண்டு இருக்கிறோம்!" என்று நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. "நம்முடைய ஜெபத்தைக் கேட்கிற மெய்யான ஒரு தெய்வம், நமக்கு பதில் கொடுக்கிறவராக இருக்கிறார்!" என்கிற நிச்சயம் நமக்கு இருக்க வேண்டும். அந்த நிச்சயமும், அதைக் குறித்ததான ஒரு எதிர்பார்ப்பும் இருந்தால்தான், நம்முடைய ஜெப வாழ்க்கையில் நாம் வளர முடியும்.

இன்றைக்கு தேவ பிள்ளைகளில் அனேகர் என்ன செய்கிறார்கள் என்றால், 'வழக்கமாக காலையில் எழும்பியவுடன் ஜெபிக்க வேண்டும்! இரவு படுக்கைக்குச் செல்வதற்கு முன்பாக ஜெபிக்க வேண்டும்!' என்கிறதான ஒரு பழக்கத்தை வைத்துக் கொள்கிறார்கள்.

அதாவது, "நம்முடைய ஜெபத்தை கர்த்தர் கேட்கிறாரா? இல்லையா? அந்த ஜெபத்திற்கு கர்த்தர் பதில் கொடுக்கிறாரா? இல்லையா?" என்கிற யோசனையே இல்லாமல், "தினமும் ஜெபிக்க வேண்டும், அவ்வளவுதான்!" என்கிறதான ஒரு பழக்கத்திற்குள் வந்து விட்டார்கள். அதனால்தான் அவர்களால் ஜெப வாழ்க்கையில் வளர முடியவில்லை.

"நம்முடைய ஜெபத்தைக் கேட்கிற கர்த்தர், நமக்கு முன்பாக நிற்கிறார்! அவர் நம்முடைய ஜெபத்தை கவனமாகக் கேட்டுக் கொண்டு இருக்கிறார்!" என்கிறதான ஒரு உணர்வு நமக்கு இருந்தால்தான், நம்மால் ஜெப வாழ்க்கையில் வளர முடியும். அப்படியாக ஜெபக் குறிப்புகளை எழுதி வைத்து, அதற்கான பதிலை கர்த்தராகிய தேவனிடத்திலிருந்து பெற்றுக் கொள்வதில் ஒரு பெரிய சந்தோஷம் இருக்கிறது.

மட்டுமல்ல, நான் "அதிகாலை 5 மணிக்கெல்லாம் எழும்பி ஜெபிக்க வேண்டும்." என்று நினைப்பேன். சில வேளைகளில், இரவு ஜெபித்து விட்டு படுக்கைக்குச் செல்வதற்கு 12 மணி கூட ஆகி விடும்! "ஒரு நாளைக்கு, 6 மணி நேரம் தூங்க வேண்டும்." என்பதுதான் என்னுடைய கணக்கு.

**"எத்தனை மணிக்குப் பிந்தி படுக்கைக்குப் போனாலும், உங்களால் அதிகாலை 5 மணிக்கு எழும்ப முடியுமா?" என்று நமது சகோதரர் அவர்களிடத்தில் கேட்டபோது...**

முடியும்! அது எனக்குப் பழக்கமாகி விட்டது. காலையில் எழும்பியவுடன் பல் துலக்கி, ஆயத்தப்பட்டு, கர்த்தருடைய சமூகத்தில் உட்காருவேன். முதலாவது, கர்த்தரை ஸ்தோத்திரம் பண்ணுவேன். அடுத்து கர்த்தரை நன்றாகத் துதிக்கும்போது, அவருடைய பிரசன்னம் வந்தவுடன், முழங்காலில் நின்றபடியே பரிசுத்த வேதாகமத்தை வாசிக்க ஆரம்பிப்பேன்.

**"ஜெபிப்பதற்காக முழங்காலில் நிற்பது சரி. ஆனால், பரிசுத்த வேதாகமத்தை வாசிக்க ஏன் முழங்காலில் நிற்க வேண்டும்?" என்று நமது சகோதரர் அவர்களிடத்தில் கேட்டபோது...**

வேத வசனங்கள் மூலமாகவும் கர்த்தர் நம்மோடு பேசுகிறார். ஒரு எதிர்பார்ப்போடு, "கர்த்தர் என்னோடு பேச வேண்டும்." என்று நாம் நினைக்கிறோம். ஜெபிக்கும்போது கர்த்தரோடு பேசுகிறோம். ஆனால், பரிசுத்த வேதாகமத்தை தொடர்ந்து வாசிக்கிற காரியத்தில், அனேகருக்கு அதன் முக்கியத்துவம் தெரியாமல் போனதினால்தான், சும்மா கடமைக்கு வாசித்து விட்டுப் போகிற பழக்கத்திற்குள் வந்து விட்டார்கள்.

நான், "ஒரே நேரத்தில் 5 அல்லது 10 அதிகாரங்கள் வாசிக்க வேண்டும்." என்று நினைக்க மாட்டேன். வேத வசனங்களை தொடர்ந்து வாசித்துக் கொண்டே வருவேன். திடீரென்று எதாவதொரு அதிகாரத்தில், ஒரு குறிப்பிட்ட வேத வசனத்தை வாசிக்கும்போது, அந்த வசனத்தோடு கர்த்தர் என்னை நிறுத்தச் சொல்வார்.

உடனே நான் வாசிப்பதை நிறுத்தி விடுவேன். அது எப்படியென்றால், கர்த்தர் சொல்வது நம்முடைய ஆவியிலே தெரியும். அவர் சொன்ன அந்தக் குறிப்பிட்ட வேத வசனத்தை திரும்பத் திரும்ப வாசித்து, அந்த வேத வசனத்தை மையமாக வைத்து ஜெபிப்பேன். காரணம், "அந்த வேத வசனத்தின் மூலமாக கர்த்தர் என்னோடு பேச விரும்புகிறார்." என்பது என் ஆவியில் நன்றாக எனக்குத் தெரியும்.

சில சமயங்களில், 5 வேத வசனங்களை வாசித்ததோடு முடித்து விடுவேன். "ஆண்டவரே, நீர் என்ன பேச விரும்புகிறீர்?" என்று சொல்லி, அந்த வேத வசனங்களை வைத்து உடனே ஜெபம் செய்வேன்.

சில நேரங்களில், என்னிடத்தில் இருக்கிற குறைகளை கர்த்தராகிய தேவன் வேத வசனங்களின் மூலமாக எனக்கு சுட்டிக் காண்பித்திருக்கிறார். அந்த சமயத்தில், உடனே அவருடைய சமூகத்தில் என்னை ஒப்புக் கொடுத்து, "ஆண்டவரே, என்னை மன்னியும்! என்னை சரிப்படுத்தும்!" என்று சொல்லி மன்றாடுவேன்.

**"உம்முடைய சத்தியத்தினாலே... பரிசுத்தமாக்கும்; உம்முடைய வசனமே சத்தியம்."** (யோவான் 17:17) என்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொல்கிறார்.

நாம் வேத வசனங்களை தியானிக்கும்போது, அந்த வேத வசனங்கள்தான் நம்மை பரிசுத்தப்படுத்தும். அதை நான் உணர்ந்திருக்கிறேன்.

சில வேளைகளில், "என்ன செய்வது?" என்று தெரியாமல் இருக்கும்போது, கர்த்தராகிய தேவன் தம்முடைய வசனத்தின் மூலமாக என்னை மிக அழகாக நடத்துவார். சில வேளைகளில் நான் கலங்கி நிற்கும்போது, கர்த்தருடைய வசனம் எனக்கு சரியான ஒரு வாக்குத்தத்தமாக இருந்து என்னை தைரியப்படுத்தும். அதாவது, **நாம் என்ன சூழ்நிலையில் இருக்கிறோமோ, அதற்குத் தகுந்தவாறு கர்த்தராகிய தேவன் நம்மோடு கூடப் பேசி, நம்மை மிகவும் அற்புதமாக நடத்துவார்.**

என்னுடைய வேதாகமத்தில், சில வேத வசனங்களை கலர் பென்சிலினால் குறித்து வைத்திருப்பேன். அது என்னுடைய வழக்கம். அதாவது, கர்த்தர் எந்த வேத வசனத்தின் மூலமாக என்னோடு பேசுவாரோ, அந்த வேத வசனத்தை கலர் பென்சிலால் கோடிட்டு வைத்திருப்பேன்.

அதைப் புரட்டிப் பார்க்கும் போதெல்லாம், கர்த்தராகிய தேவன் என்னோடு கூடப் பேசிய அந்தக் காரியம் என் ஞாபகத்திற்கு வரும். அது மனதிற்கு மிகுந்த ஆறுதலாக இருக்கும். **கர்த்தராகிய தேவனுக்கும் நமக்கும் இடையே உள்ள உறவில் நாம் சரியாக இருக்கிற பட்சத்தில், நம்முடைய ஜெப நேரம் மிக இனிமையான ஒரு நேரமாக இருக்கும்.** கர்த்தராகிய தேவனுடைய சமூகத்தில் போய் உட்கார்ந்து, பாட்டுப் பாடி, அவரைத் துதித்து கொண்டே இருந்தால், நேரம் போவதே தெரியாது.

- தொடரும்...

எழுப்புதலை நோக்கி...

'இயேசு விடுவிக்கிறார்'

# ஊடக ஊழியம்!




'ஜெபமும், சுவிசேஷமும்!' என்கிற இரண்டு ஊழிய தரிசனக் கண்களோடு, கர்த்தராகிய தேவனுடைய இராஜ்ஜியத்தை நிலைநாட்டி வருகிற, நமது 'இயேசு விடுவிக்கிறார்' ஊழியங்கள், பொன் விழா ஆண்டை நோக்கி பயணிக்கின்றது. ஆல மர விழுதுகளைப்போல 25 வகையான ஊழியங்களை நிறைவேற்றி வருகிற இந்த ஊழியத்தின் மிகப் பிரதான ஊழியங்களில் ஒன்று, ஊடக ஊழியம்.

**"இதோ, நான் புதிய காரியத்தைச் செய்கிறேன்; இப்பொழுதே அது தோன்றும்;" (ஏசாயா 43:19)** என்கிற வாக்குத்தத்த வசனத்தின்படி, கடந்த 2019ம் ஆண்டு முழுவதும் புதிய காரியங்களை, புதிய வழிகளை, புதிய தொழில் நுட்பங்களை நமக்களித்து, திரள் கோடி ஜனங்களுக்கு ஆறுதலின் செய்தியையும், தீர்க்கதரிசனச் செய்தியையும், கர்த்தருடைய கடிந்து கொள்ளுதலின் செய்தியையும், இந்த உலகத்தின் கடைமுனை வரைக்கும் எடுத்துச் செல்ல கிருபை அளித்த கர்த்தராகிய தேவனுக்கே மகிமை உண்டாவதாக!

நமது 'இயேசு விடுவிக்கிறார்' ஊடக ஊழியத்திற்கு, இது வெள்ளி விழா ஆண்டு! 25 ஆண்டுகளாக கர்த்தராகிய தேவனுடைய சித்தத்தையும், ஊழியத் திட்டத்தையும் வெற்றிகரமாக நிறைவேற்ற அவரே புதிய பாதைகளை உருவாக்கினார்.

ஊரடங்குக் காலத்திலும் தடைப்படாமல், இவ்வூழியம் பெரும் திரள் ஜனங்களுக்கு ஆசீர்வாதமாக இருந்தது. மெய் தேவனாகிய இயேசு கிறிஸ்துவை அறியாத லட்சக்கணக்கான பிற மத நம்பிக்கை உடையவர்களும் இந்த ஊழியத்தின் மூலமாக ஆசீர்வதிக்கப்பட்டதைக் கேள்விப்பட்டு, எங்கள் உள்ளம் கர்த்தருக்குள் மகிழ்ச்சியால் பொங்குகிறது. அல்லேலூயா!

நமது 'இயேசு விடுவிக்கிறார்' ஊடக ஊழியமானது, 4 விதங்களில் செயல்பட்டு வருகிறது.

## 1. தொலைக்காட்சி ஊழியம்!

கடந்த **25 வருடங்களாக** நமது தொலைக்காட்சி ஊழியத்தின் மூலமாக **இந்தியா, ஐரோப்பா** மற்றும் **மத்தியக் கிழக்கு நாடுகளுக்கு** கர்த்தருடைய வார்த்தையை நேரடியாக இல்லங்களின் வரவேற்பறைக்குள் எடுத்துச் செல்ல கர்த்தராகிய தேவன் உதவி செய்தார்.




நமது தொலைக்காட்சி **ஊழியங்களின்** மூலமாக கர்த்தராகிய தேவன் எழுப்பிய எண்ணற்ற **சாட்சிகளைக்** கேள்விப்பட்டு, அவைகளை **ஆவணப்படுத்தி உள்ளோம்.** கடந்த 2020ம் வருடத்தில் மட்டும் சுமார் **3,079 நிகழ்ச்சி**களை, **15 தொலைக்காட்சி நிறுவனங்கள் மூலமாக, 5 மொழிகளில் ஒளிபரப்ப** கர்த்தராகிய தேவன் கிருபை செய்தார். இதில், **'சத்தியம்' தொலைக்காட்சி பெரும் பங்காற்றி வருகிறது**.

கடந்த 2020 டிசம்பர் மாதம், **'KIDSMAS'** என்கிற **சிறு** பிள்ளைகளுக்கான **கிறிஸ்துமஸ் நிகழ்ச்சி**கள் **தமிழிலும், இந்தியிலுமாக** பல சேனல்களில் **6 நாட்கள்** ஒளிபரப்பு செய்யப்பட்டது. இந்நிகழ்ச்சியின் மூலமாக, இந்தியா மற்றும் வெளி நாடுகளில் உள்ள லட்சக்கணக்கான சிறு பிள்ளைகள் ஆசீர்வதிக்கப்பட்டார்கள்.



**கர்த்தருக்குச் சித்தமானால், வருகிற (2021) பிப்ரவரி 7 முதல், 'ISHWAR TV' என்கிற ஒரு தொலைக்காட்சி சேனலில் நமது இந்தி நிகழ்ச்சிகளை ஒளிபரப்புச் செய்ய, ஜெபத்துடன் நமது ஊடக ஊழியர்கள் தயாராகி வருகின்றனர். இந்த இந்தி வழி ஊழியத்திற்கு ஏராளமான தன்னார்வ ஜெப வீரர்களும், தொலைபேசியில் ஜெபிக்கிறவர்களும், ஆலோசகர்களும் தேவை. இந்த இந்தி பின்தொடர் ஊழியங்களுக்காக ஜெபியுங்கள்.**

## 2. சமூக வளைத் தள ஊழியம்!

கடந்த 2011ம் வருடம் முதல், சமூக வளைத் தளங்களில் நமது **ஊடக ஊழியம்** ஆரம்பமானது. 24×7 **WEB Streaming** மூலம் ஆரம்பிக்கப்பட்ட இந்த **ஊழியமானது**, மெல்ல புதிய பரிமாணத்துடன் செயல்பட ஆரம்பித்தது. கடந்த 2012ம் ஆண்டுமுதல், **YouTube** மற்றும் **Facebook** மூலமாக டிஜிட்டல் **ஊடக ஊழியமானது** புதிய யுக்தியோடு செயல்பட்டு வருகிறது.




இன்றுவரை நமது பல விதமான YouTube சேனல்கள் மூலமாக, சுமார் **13,00,000 சந்தாதார**ர்கள் நமக்கு இருக்கிறார்கள். இவர்கள் மூலமாக பல கோடி மக்களுக்கு நமது நிகழ்ச்சிகள் Share செய்யப்பட்டு, தேவனுடைய வார்த்தைகள் மின்னலாக அகிலமெங்கும் பரவி பலனளித்து வருகிறது. ஒரு நிகழ்ச்சியை நாம் பதிவேற்றம் செய்தால், ஒரே நேரத்தில் சுமார் **10 லட்சத்திற்கும் அதிகமானோருக்கு தகவல் அனுப்பப்பட்டு**, குறைந்தது **ஒரு லட்சம் முதல், 3 லட்சம் மக்கள்** நமது நிகழ்ச்சிகளைக் கண்டு ஆசீர்வதிக்கப்பட்டு வருகின்றனர்.




நமது, **'ஜெபிக்கலாம் வாங்க!'** மற்றும் **'குடும்ப ஆசீர்வாத நேரம்!'** நிகழ்ச்சிகள், **வாக்குத்தத்தச் செய்திகள், வாக்குத்தத்தப்** பாடல்கள் ஆகியவை **YouTtube Trending** ஆனதை எண்ணி, கர்த்தராகிய தேவனை துதிக்கிறோம்.

இதுபோக Instagram, Twitter, **Pod Cast, Spotify, Apple** itunes, **You Version, Alexa,** Radio.co, **Radio** Garden போன்ற சமூக வலைத் தளங்கள் மூலமாக அனுதின தேவ வார்த்தைகள் பறைசாற்றப்பட்டு வருகிறது.




ஒருவேளை நீங்கள் இன்னும் நமது YouTube, Facebook மற்றும் Instagram சந்தாதாரராக ஆகாமல் இருந்தால், உடனே சந்தாதாரர் ஆகி தேவாசீர்வாதங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்.




## 3. COMFORTER DIGITAL CHANNEL!

நமது அன்பு சகோதரர் **மோகன் சி. லாசரஸ்** மற்றும் தீர்க்கதரிசி சகோ. **வின்சென்ட் செல்வக்குமார்** அவர்களுக்கு கர்த்தர் கொடுத்த ஊழியத் திட்டத்தின்படி,




நமது **'இயேசு விடுவிக்கிறார்'** ஊழியம் COMFORTER DIGITAL CHANNELஐ ஆரம்பித்து, வெற்றிகரமாக செயல்பட்டு, **தமிழ்** மற்றும் **கன்னட மொழிகளில் 24 மணி நேரமும் நமது நிகழ்ச்சி**கள் ஒளிபரப்பப்பட்டு வருகிறது.




நீங்கள் www.comfortertv.com என்கிற இணைய தளத்திற்குள் நுழைந்து, தமிழ் மற்றும் கன்னட மொழிகளில் ஒளிபரப்பாகிற நூற்றுக்கணக்கான நிகழ்ச்சிகள், பாடல்கள்,

குறு நாடகங்கள் மற்றும் வித்தியாசமான நிகழ்ச்சிகளை கண்டு களியுங்கள்.

மேலும், Andriod Mobile App, Apple ios App, Android Smart TV App, AMAZON FIRE TV போன்ற பல வழிமுறைகளில் நிகழ்ச்சிகளைக் கண்டு, நீங்கள் ஆசீர்வதிக்கப்பட அன்புடன் உங்களை அழைக்கிறோம்.

இதுவரை சுமார் 1,00,000க்கும் அதிகமானோர் நமது COMFORTER TV Mobile Appஐ பதிவிறக்கம் செய்துள்ளனர். விரைவில் நமது இந்தி நிகழ்ச்சிகள் COMFORTER DIGITAL CHANNELயில் ஒளிபரப்பு செய்யப்பட உள்ளது.






## 4. GOOD NEWS OTT CHANNEL!

**'இயேசு விடுவிக்கிறார்'** ஊழியத்தின் புதிய முற்சியாக, GOOD NEWS OTT CHANNEL என்கிற ஒரு பொதுவான ஊடக தளத்தை உருவாக்க, நமது ஊடக ஊழியர்கள் முயற்சி செய்து வருகின்றனர்.

இந்த OTT சேனலானது, **அனைத்து திருச்சபையினருக்கும், ஊழிய நிறுவனங்களுக்கும், மிஷனெரி இயக்கங்களுக்கும் பொதுவான ஊடக தளமாக செயல்படும்**. கடைசிக் கால எழுப்புதலின் செய்தியை துரிதமாக இந்த உலகமெங்கும் எடுத்துச் செல்ல, புதிய தொழில் நுட்பத்துடன், புதிய நிகழ்ச்சிகள் தயாரிக்கப்பட்டு வருகிறது.

**இந்த ஊழியத்தின் முன்னேற்றத்திற்காக, குறித்த காலத்தில் வெளியிட தீவிரமாக உழைத்து வருகிற நமது தேவ ஊழியர்களுக்காக, தவறாமல் ஜெபியுங்கள்.**

மாதந்தோறும் இவ்விதமான ஊடக ஊழியத்தை, நூற்றுக்கணக்கான பங்காளர்கள் நன்கொடைகளை அளித்து தாங்கி வருகின்றனர். ஒவ்வொரு நாளும் ஊடக ஊழியத்திற்காக செலவிடப்படும் லட்சங்கள், கோடிக்கணக்கான ஆத்துமாக்களை அறுவடை செய்து, நமக்குப் பரிசாக அளித்து வருகிறது.

இதுவரை நீங்கள் நமது இந்த **'இயேசு விடுவிக்கிறார்' ஊடக ஊழியத்திற்காக** ஜெபிக்காமல் இருப்பீர்களானால், **இன்றுமுதல், தினமும் ஒரு 10 நிமிடமாவது ஜெபிக்கத் தீர்மானம் செய்யுங்கள்.**

"இந்த இறுதிக் கால எழுப்புதல் ஊழியத் திட்டத்தில் மிகத் தீவிரமாக செயல்பட்டு வருகிற, **'இயேசு விடுவிக்கிறார்'** ஊடக ஊழியத்தில் உங்கள் பங்கு என்ன?" என்பதை இன்றே தீர்மானியுங்கள். நீங்கள் **'ஜெபிக்கலாம் வாங்க!'** நிகழ்ச்சியை முழுப் பொறுப்பெடுத்து தாங்க முன் வரலாம்.

அல்லது மாதந்தோறும் **₹ 500 / ₹ 1,000 / ₹ 2,000**, அல்லது நீங்கள் விரும்புகிறபடி கொடுத்து தாங்கலாம். **₹ 10,000** கொடுத்து ஒரு நிகழ்ச்சியைப் பொறுப்பெடுக்கலாம். நீங்கள் பொறுப்பெடுக்கும் நிகழ்ச்சியை, உங்கள் பெயரிலோ, உங்கள் குடும்பத்தின் பெயரிலோ, உங்கள் நிறுவனத்தின் பெயரிலோ ஒளிபரப்பு செய்யப்படும். அந்த நிகழ்ச்சியின் DVDயும் உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். நீங்கள் காணிக்கை அனுப்பியவுடன் அதன் விபரத்தை **+91 890 383 5315** என்ற எண்ணிற்கு தெரியப்படுத்தவும்.

### Our Account Details:

| | |
|---|---|
| A/C Name : | Jesus Redeems TV Ministry |
| A/C No. : | 27400200000075 |
| Bank : | Indian Overseas Bank |
| Branch Code : | 2740 |
| Banch : | Angamangalam, Kurumbur |
| IFSC No. : | IOBA0002740 |
| Swift Code : | IOBAINBB100 |

இப்பொழுது நமது Comforter TV Android App மற்றும் www.comfortertv.com என்ற இணையதள முகவரி மூலம் உங்கள் நன்கொடைகளை செலுத்தலாம்.

G Pay **89038 35315**

**கர்த்தராகிய தேவன் உங்களை ஆசீர்வதிப்பாராக!**

**பரலோகத்தில் உங்கள் பலன் மிகுதியாயிருக்கும்!**



நாலுமாவடி தேவனுடைய வீட்டுச் செய்திகள்

இயேசு கிறிஸ்துவின் அன்பை வெளிப்படுத்த,

# புது வாழ்வு பல்நோக்கு மருத்துவமனை!

'இயேசு விடுவிக்கிறார்' புது வாழ்வு சங்கம் – சமூக சேவைப் பிரிவு.

NEW LIFE MULTI SPECIALITY MISSION HOSPITAL

Model

**க**ர்த்தருடைய கிருபையினால், **புது வாழ்வு பல்நோக்கு மருத்துவமனை** உங்கள் ஜெபத்தினாலும், உதாரத்துவமான காணிக்கையினாலும், முதல் தளம் வரைக்குமான கட்டுமானப் பணிகள் (Civil Works) முடிவு பெற்று, இறுதிக் கட்ட வடிவமைப்புப் பணிகள் துரிதமாக நடைபெற்று வருகிறது. மேலும், தரை தளத்திற்குத் தேவையான படுக்கைகள் மற்றும் சில மருத்துவ உபகரணங்களும் வாங்கப்பட்டு உள்ளது.

தற்போது நடைபெற்றுக் கொண்டிருக்கிற Electrical Works, I.T. Works, S.T. P. Gas Line Works மற்றும் Interior Design பணிகளுக்காக **ஜெபித்துக் கொள்ளுங்கள்**. இந்த மருத்துவமனையில் பணியாற்றுவதற்கு தகுதியான தேவ பிள்ளைகளை (Doctors, Nurses, Technicians) கர்த்தர் அழைத்து வர **ஜெபித்துக் கொள்ளுங்கள்**.

இந்த மருத்துவமனை கட்டுமானத்திற்கும், மருத்துவ உபகரணங்கள் வாங்குதற்கும் அனேக தேவ பிள்ளைகள் கொடுத்து தாங்கினார்கள். அவர்களுக்காக கர்த்தரை துதிக்கிறோம். இன்னும் **எஞ்சிய தேவைகள் சந்திக்கப்பட ஜெபியுங்கள்**. கர்த்தராகிய தேவனுடைய இந்த உன்னதமான ஊழியப் பணிக்காக கொடுத்துத் தாங்குகிற தேவ பிள்ளைகளை, கர்த்தர் தாமே ஆசீர்வதிப்பாராக! - **உங்கள் சகோதரன்.**

**இன்னும் வாங்கப்பட வேண்டிய மருத்துவ உபகரணங்கள்!**

| S.No | NAME OF THE PRODUCT | COST | QTY |
|---|---|---|---|
| 1 | Multi Para Monitor | 2,25,000 | 4 |
| 2 | Operation Theater Lights | 2,25,000 | 1 |
| 3 | OT Hydraulic Table | 2,25,000 | 1 |
| 4 | Defibrillator | 2,65,000 | 3 |
| 5 | Diathermy Machine | 2,95,000 | 1 |
| 6 | Boils Apparatus with Vaporizer | 6,50,000 | 1 |
| 7 | Fully Auto Analyser | 6,50,000 | 1 |
| 8 | C.Arm | 9,25,000 | 2 |
| 9 | Ventilator | 12,05,000 | 1 |
| 10 | USG Scan with Printer | 19,50,000 | 1 |




- **உங்கள் குடும்பம், அல்லது தொழில் சார்பாக, ஒரு மருத்துவக் கருவி வாங்கிக் கொடுக்க பொறுப்பெடுக்கலாம்.**
- **இந்த மருத்துவப் பணிக்கென்று உங்களால் இயன்ற காணிக்கைகளை அனுப்பலாம்.**

கர்த்தர் உங்களை **ஏவுவாரானால்**, உங்கள் நன்கொடைகளை **எமது வங்கிக் கணக்கில் நேரடியாகவோ**, அல்லது 'NEW LIFE SOCIETY' என்கிற பெயரில் Cheque / D.D., **மூலமாகவோ**, கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பலாம்.

Online Donation: www.jesusredeems.com/nls_hospital.php

Foreign Contributions: +91 890 383 5315.

ADDRESS: NEW LIFE SOCIETY, Main Road, Nalumavadi-628 211, Thoothukudi Dt., India.

www.newlifesociety.in info@newlifesociety.in

உங்கள் நன்கொடைகளை அனுப்ப...

**இந்தியாவில் உள்ளவர்களுக்கு...**

| | |
|---|---|
| A/c Name: | NEW LIFE SOCIETY |
| A/c No: | 054100710400513 |
| Bank: | TAMILNAD MERCANTILE BANK LTD., |
| Branch: | Prahasapuram, Nazareth |
| Branch Code: | 054 |
| IFS Code: | TMBL0000054 |
| MICR Code: | 627060021 |
| SWIFT Code: | TMBLINBBTUT |

உங்கள் நன்கொடைகளுக்கு 80G யின் வருமான வரி விலக்கு உண்டு.

நாலுமாவடி–திறப்பின் வாசல் ஜெப சாட்சிகள்!

# கலங்காதீர்கள், அற்புதங்களைப் பெற்றுக் கொள்வீர்கள்!

உங்கள் வேலையை, அல்லது உங்கள் தொழிலை, அல்லது உங்கள் ஆரோக்கியத்தை இழந்து வேதனைப்படுகிறீர்களா? பிரச்சனைகளினால் சமாதானத்தை இழந்து தவிக்கிறீர்களா?

கலங்காதீர்கள்! நீங்கள் இழந்து போனதை எல்லாம் உங்களுக்குத் திரும்ப அளிக்க கர்த்தராகிய இயேசு கிறிஸ்து ஆவலாக இருக்கிறார்.

விசுவாசத்தோடு ஜெபியுங்கள். அப்பொழுது நீங்கள் பெற்றுக் கொள்வீர்கள். கடந்த நாட்களில் ஜெபத்தைக் கேட்டு, கர்த்தராகிய தேவன் செய்த அற்புதங்களில் சிலவற்றைப் பாருங்கள்:

## 27 வருட வேதனை மாறி, சுகம்!

என் வலது பக்க கழுத்தெலும்பு தேய்ந்ததின் நிமித்தமாக உண்டாகிற வலியினால். சுமார் 27 வருடங்களாக மிகவும் கஷ்டப்பட்டேன். வலி வந்து விட்டால், நான் ஒரு 'ரோபோ' போலத்தான் இருப்பேன். திரும்பிப் படுக்கவோ, படுக்கையிலிருந்து எழும்பவோ முடியாமல் மிகவும் கஷ்டப்படுவேன். வயது ஆக ஆக எனக்கு வலி அதிகமாகிக் கொண்டேதான் இருந்தது.



எத்தனையோ டாக்டர்களிடம் காண்பித்தும், "உங்களுக்கு எங்களால் இயன்ற எல்லா சிகிச்சையும் கொடுத்து விட்டோம். இனி ஒன்றும் செய்ய முடியாது. ஆகவே, இனி படுத்து ஓய்வெடுங்கள்." என்று சொல்லி விட்டார்கள்.

மிகுந்த மன வேதனையோடு, திறப்பின் வாசல் ஜெபத்தில் தொடர்ந்து கலந்து கொண்டு, ஜெபித்து விட்டுச் செல்வேன். இந்நிலையில் ஒருநாள், "இயேசு விடுவிக்கிறார்'-ஜெபிக்கலாம் வாங்க!" நேரலை நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அதில் சொல்லப்பட்ட சாட்சிகளைக் கேட்டு, மிகுந்த விசுவாசத்தோடு வலி இருந்த இடத்தில் கை வைத்து கண்ணீரோடு ஜெபித்தேன். கர்த்தர் மிக அற்புதமாக 27 வருட வேதனையிலிருந்து எனக்கு பரிபூரணமான சுகத்தைக் கொடுத்தார். – விமலா, தூத்துக்குடி.

## போதைப் பழக்கத்திலிருந்து விடுதலை!

என்னுடைய **18வது வயதிலிருந்து** நான் **புகைப் பழக்கம்** மற்றும் **மது பானத்திற்கு அடிமை**ப்பட்டிருந்தேன். எவ்வளவோ முயற்சிகளைப் செய்தும், அதிலிருந்து என்னால் விடுதலை பெறவே முடியவில்லை.



கடந்த 2020 ஆகஸ்ட் மாதம், **"இயேசு விடுவிக்கிறார்'-ஜெபிக்கலாம் வாங்க!"** நேரலை நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பொழுதும் கூட 2 கட்டு பீடி வாங்கி வைத்திருந்தேன்.

அன்றைய ஜெப வேளையில் நமது சகோதரர் அவர்களோடு இணைந்து நானும் ஜெபித்துக் கொண்டிருந்தபோது, எனக்குள் இருந்து புகையைப்போல ஒரு அசுத்த ஆவி வெளியேறிப் போனதை உணர்ந்தேன். அந்த வினாடியே அந்தப் **பாவப் பழக்கத்திலிருந்து** கர்த்தர் எனக்கு **விடுதலை** கொடுத்தார். அந்த நாள்முதல், எனக்கு அந்தப் **பாவப் பழக்கத்தைக் குறித்த எந்த விதமான எண்ணமும்** எனக்கு **வருவதில்லை**. – **ஜேக்கப், கோவை.**

## பில்லி–சூனிய ஆவி வெளியேறி, விடுதலை!

நான் பயங்கரமான **பில்லி–சூனியக் கட்டினால் பாதிக்கப்பட்டு, சொந்த வீடு** மற்றும் **சொத்துக்கள் எல்லாவற்றையும் இழந்தேன்**. இதனால் குடும்பத்தில் **பயங்கரமான பிரச்சனைகள்! சண்டைகள்!** என் **கணவரும்** என்னை விட்டுப் **பிரிந்து போய்**



விட்டார். இரண்டு வருடங்கள் நான் **தனியாகத்தான்** இருந்தேன். ஒவ்வொன்றாக யோசித்து யோசித்து, என் இருதயத்தை கசக்கிப் பிசைவதைப்போல் பயங்கரமான **நெஞ்சு வலி இருக்கும்**. 4 வருடங்களாக **அடிக்கடி இரத்த** வாந்தியும் எடுத்தேன். டாக்டர்கள், "உங்களுக்கு இரத்தப் புற்று நோயாகக் கூட இருக்கலாம்! ஆகவே, உங்களுக்கு மாத்திரை எதுவும் தர முடியாது." என்று சொல்லி விட்டார்கள்.

மிகுந்த மன வேதனையோடு கடந்த 2017ம் வருடம் திறப்பின் வாசல் ஜெபத்தில் கலந்து கொண்டு ஜெபித்தேன். ஜெப வேளையில், கர்த்தருடைய ஆவியானவர் என்னை பலமாக ஆட்கொண்டபோது, எனக்குள் இருந்த அந்த **பில்லி–சூனிய ஆவி என்னை விட்டு வெளியேறிப் போயிற்று.**

அந்நேரமே நான் **பூரண விடுதலை**யைப் பெற்றுக் கொண்டேன். நான் **இழந்து போன எல்லாவற்றையும்** கர்த்தர் எனக்கு **திரும்பத் தந்து**, குடும்பத்திற்குள்ளும் ஒரு **சமாதானத்தை** தந்தார். – **பால் அரசி, கண்ணன்** நல்லூர்.

## அசுத்த ஆவி வெளியேறி, அற்புத சுகம்!

தீராத **தலை வலியினால்**, சுமார் **30 வருடங்களாக வேதனை**ப்பட்டேன். என்னால் வீட்டிற்குள் இருக்கவே முடியாது. எவ்வளவோ மருந்து, மாத்திரைகளை சாப்பிட்டும் சுகம் கிடைக்கவில்லை. டாக்டர்கள், "உங்கள் **மூளையின் வலது பக்கத்தில் பிரச்சனை** இருக்கிறது. ஆபரேஷன் பண்ண வேண்டும். ஆபரேஷன் பண்ணும்போது, எதுவும் நடக்கலாம்!" என்று சொல்லி விட்டார்கள்.

மிகுந்த மன வேதனையோடு இருந்த அந்த சூழ்நிலையில், கடந்த 2020 மே மாதம், **"இயேசு விடுவிக்கிறார்'-ஜெபிக்கலாம் வாங்க!"** நேரலை நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது நமது சகோதரர் அவர்கள், **"உங்களுடைய** வியாதிக்காக விசுவாசத்தோடு நீங்களே ஜெபம் **பண்ணுங்கள்."** என்று சொன்னார்கள்.



**நானும்** அப்படியாக ஜெபித்துக் கொண்டிருந்தபோது, எனக்குள்ளிருந்து ஒரு **ஆவி வெளியேறிப் போனதை** நான் உணர்ந்தேன். அந்த வினாடியே **பூரணமான சுகத்தை**ப் பெற்றுக் கொண்டேன். – **இந்திரா, ஆதிகேசவநல்லூர்.**

## 15 வருட, ஒற்றைத் தலைவலி சுகமானது!

சுமார் 15 வருடங்களாக ஒற்றைத் தலைவலியினால் மிகவும் கஷ்டப்பட்டேன். தலைவலி வரும் போதெல்லாம், கண்களில் தண்ணீர் வடிந்து கொண்டே இருக்கும். எதுவுமே சாப்பிட முடியாமல், வாந்தி எடுத்துக் கொண்டே இருப்பேன். எவ்வளவோ சிகிச்சைகளை செய்து பார்த்தும், சுகம் கிடைக்கவே இல்லை.



ஒருநாள், "இயேசு விடுவிக்கிறார்'-ஜெபிக்கலாம் வாங்க!" நேரலை நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தோம். அதில் சொல்லப்பட்ட சாட்சிகளைக் கேட்டபோது, எங்களுக்குள் விசுவாசம் உண்டானது. என் கணவரும், என் பிள்ளைகளும் என் தலையில் கை வைத்து, மிகுந்த விசுவாசத்தோடு என் சுகத்திற்காக ஜெபித்தார்கள். கர்த்தர் எங்கள் விசுவாசத்தைக் கனப்படுத்தி, 15 வருடங்களாக இருந்த ஒற்றைத் தலை வலியிலிருந்து எனக்கு நிரந்தரமான சுகத்தைக் கொடுத்தார். – அனிதா, முளகுமூடு.

பாருங்கள், இவர்களுக்கு அற்புதம் செய்த கர்த்தராகிய **இயேசு கிறிஸ்து, உங்களுக்கும் அற்புதம் செய்வார்!** உங்கள் காரியம் எதுவாக இருந்தாலும், அந்தக் காரியத்தை கடிதத்தில் எழுதி, பின்கோடுடன் கூடிய உங்கள் தெளிவான முகவரியோடு எங்களுக்கு அனுப்பி வையுங்கள். **நாங்கள் உங்களுக்காக ஜெபிப்போம்.** நீங்களும் இந்த நாளில் உபவாசித்து, **விசுவாசத்தோடு ஜெபியுங்கள்.** இயேசு கிறிஸ்து உங்களுக்கும் அற்புதம் செய்து, உங்கள் துக்கத்தை மாற்றுவார். திறப்பின் வாசல் ஜெப தினத்தன்று, காலை 9:00 – மாலை 3:00 மணிவரை ஜெபிப்போம். நீங்களும் இதே நேரத்தில் எங்கிருந்தாலும் **ஜெபியுங்கள்.** ஜெபத்தில் கர்த்தர் கொடுக்கும் பதிலை உங்களுக்குத் தெரியப்படுத்துவோம். – உங்கள் சகோதரன்.

நாலுமாவடி திறப்பின் வாசல் ஜெபம்! **உங்கள் அற்புதத்தின் நாள்: 2021**

# பிப்ரவரி 27 (கடைசி சனிக்கிழமை)

Address: Standing in the Gap Prayer, Nalumavadi-628 211, Thoothukudi Dist., India.

# செய்திகள்!

## நிதிப் பற்றாக்குறை ₹ 10.75 லட்சம் கோடியாக உயர்வு!

**நாட்டின் நிதிப் பற்றாக்குறை**, பட்ஜெட் இலக்கையும் தாண்டி 135 சதவிகிதத்திற்கு மேல் உயர்ந்து, **₹ 10.75 லட்சம் கோடியாகி உள்ளது! "கொரோனா"** பரவல் காரணமாக ஏற்பட்ட வருவாய் இழப்பு இதற்கு **முக்கியக் காரணம்!"** என்றாலும், 'பட்ஜெட்டில் **இது** பாதிப்பை ஏற்படுத்தலாம்!' என்பதால், 'சலுகைகள் அறிவிக்கப்படுமா?' என்ற **கேள்வியும்** எழுந்துள்ளது.

'கொரோனா' பரவலைக் கட்டுப்படுத்த பிறப்பிக்கப்பட்ட **'ஊரடங்கு'** தொடர்ந்து **நீட்டிக்கப்பட்டதால், தொழில்துறைகள் அனைத்தும் முடங்கிப் போய் விட்டன! பொருளாதாரம் கடுமையான சரிவை சந்தித்தது! துறைகள் தோறும் பல லட்சம் பேர் வேலை இழந்தனர்!** தற்போது தளர்வுகள் **அறிவிக்கப்பட்டு** வந்தாலும், தொழில் **துறைகள் இன்னும் முழுமை**யாக மீளவில்லை.

**2வது அலையாக,** "இங்கிலாந்திலிருந்து பரவத் தொடங்கிய, **'புதிய வகை கொரோனா!"** என **அச்சம் அதிகரித்து** வருகிறது. இதனால், மத்திய மற்றும் மாநில **அரசுகளுக்கு வருவாய் குறைந்து விட்டது!** கடந்த பட்ஜெட்டில் நிர்ணயிக்கப்பட்டதை விட, நிதிப் **பற்றாக்குறை அதிகரித்துள்ளது!**

**அதாவது,** கடந்த 2020 நவம்பர் மாத **இறுதியின்படி,** கடந்த 2020-2021 நிதியாண்டுக்கான பட்ஜெட்டில் **திருத்திய மதிப்பீட்டின்படி** நிர்ணயிக்கப்பட்டதை விட, நிதிப் பற்றாக்குறை 135.1% உயர்ந்து, ₹ 10.75 லட்சம் கோடியை தாண்டி விட்டது. முந்தைய நிதியாண்டில் 2019-2020 பட்ஜெட் திருத்திய மதிப்பீட்டை விட, பற்றாக்குறை 114.8% அதிகம் இருந்தது.

இது குறித்து சி.ஏ.ஜி. வெளியிட்ட அறிக்கையின்படி, கடந்த 2020 நவம்பர் மாத இறுதியில் **நாட்டின் நிதிப் பற்றாக்குறை ₹ 10,75,507 கோடி**யாக உள்ளது. அரசின் மொத்த வருவாய் 8,30,851 கோடி. இது திருத்திய பட்ஜெட் மதிப்பீட்டில் 37%. இதில் நிகர வரி வருவாய் ₹ 6,88,430 கோடி. வரி அல்லாத வருவாய் ₹ 1,24,280 கோடி மற்றும் கடன் சாரா மூலதன வருவாயாக பொதுத் துறை பங்கு விற்பனை உள்ளிட்டவை மூலம் திரட்டிய 18,141 கோடியும் அடங்கும்.

நடப்பு நிதியாண்டில் வரி வருவாய் பட்ஜெட் மதிப்பீட்டில் 42.1% உள்ளது. இது முந்தைய ஆண்டின் இதே காலக் கட்டத்தில் 45.5%. வரி சாராத வருவாய் 32.3%. இது முந்தைய ஆண்டில் 74.3 சதவிகிதமாக இருந்தது. கடந்த நிதியாண்டில் பட்ஜெட் மதிப்பீட்டில் மொத்த வருவாய் 48.6% என குறிப்பிடப்பட்டுள்ளது.

புள்ளி விபரங்களின்படி மாநில அரசுகளுக்கு கடந்த 2019 நவம்பர் வரை நடப்பு நிதியாண்டில் வரி பங்கீடாக ₹ 3.34 லட்சம் கோடியை மத்திய அரசு அறிவித்துள்ளது.

செலவீனங்களைப் பொறுத்தவரை பட்ஜெட் மதிப்பீட்டில் 63%. அதாவது, ₹ 19,06,358 கோடி மொத்த செலவாகவும், வருவாயாக ₹ 16,65,200 கோடியும், மூலதனக் கணக்கில், ₹ 2,41,158 கோடியும் உள்ளது.

மொத்த வருவாய் செலவீனத்தில், ₹ 3.83 லட்சம் கோடி வட்டிக்காகவும், மானியங்களுக்காக ₹ 2,02,119 கோடியும் செலவிடப்பட்டுள்ளது.

கடந்த 2020 பிப்ரவரி மாதம் பட்ஜெட்டை சமர்ப்பித்த மாண்புமிகு மத்திய நிதியமைச்சர் **நிர்மலா சீதாராமன்** அவர்கள், "நிதிப் பற்றாக்குறை 'ஜி.டி.பி'யில் 3.5%. அதாவது, ₹ 7.96 லட்சம் கோடியாக இருக்கும்!" என மதிப்பீடு செய்திருந்தார். இந்நிலையில், 'கொரோனா' பரவல் காரணமாக **பற்றாக்குறை இந்த அளவுக்கு அதிகரித்திருப்பது பெரும் அதிர்ச்சி**யை ஏற்படுத்தியுள்ளது.

"எதிர்வரும் பட்ஜெட்டிலாவது வரிச் சலுகைகள் கிடைக்குமா? வீடு வாங்குவதற்கு சலுகைத் திட்டங்கள், தொழில் துறைகளுக்கு சலுகை அறிவிப்புகள் கிடைக்குமா?" என்கிற எதிர்பார்ப்பு உள்ளது. பற்றாக்குறை அதிகரித்துள்ள நிலையில், பொருளாதாரத்தை மீட்பதற்கேற்ப அறிவிப்புகளை மத்திய அரசு வெளியிட வேண்டும்!" என தொழில்துறையினர் எதிர்பார்க்கின்றனர். (நன்றி: 'தினகரன்', 2021 [illegible]).




**இயேசு விடுவிக்கிறார்,**
நாலுமாவடி - 628 211,
தூத்துக்குடி மாவட்டம்,தமிழ்நாடு, இந்தியா.

Office: (+91) 04639 - 22 00 22
Email: prayer@jesusredeems.org
Visit: www.jesusredeems.com


உங்கள் அவசர ஜெப அழைப்பிற்கு 24 மணி நேரமும் **(+91) 04639 - 2200 00** என்ற இந்த எண்ணில் மட்டும் தொடர்பு கொள்ளவும்.

## கெத்செமனே ஜெப மையங்கள்!

| | | |
|---|---|---|
| அரக்கோணம் | - | 04177 - 230029, 63819 42472 |
| செங்கல்பட்டு | - | 95975 88831 |
| கோவை | - | 0422-230 9040, 89034 05315 |
| கடலூர் | - | 996 51 44 000 |
| தர்மபுரி | - | 95242 20022 |
| திண்டுக்கல் | - | 638 3015 262 |
| ஈரோடு | - | 97507 22000, 0424-22 11 800 |
| காஞ்சிபுரம் | - | 044- 2723 3760, 89036 35315 |
| காரைக்குடி | - | 801 221 1022, 04565 - 225 022 |
| ஊட்டி | - | 94870 26651, 0423 - 2441819 |
| பெரம்பலூர் | - | 97887 88512 04328 - 224428 |
| பொள்ளாச்சி | - | 99629 89853. |
| சேலம் | - | 83000 19710 |
| சிவகாசி | - | 94429 06567, 04562 - 276567 |
| தஞ்சாவூர் | - | 94443 81971, 04362-233 334 |
| தேனி | - | 99767 66422, 04546-255 335 |
| திருப்பூர் | - | 0421-223 3345, 94420 82200 |
| திருவாரூர் | - | 99767 66322, 04366-250561 |
| திருவண்ணாமலை | - | 98655 53420, 04175 -227777 |
| வேளாங்கண்ணி | - | 971 58 33 000 04365-263 050 |
| வேலூர் | - | 0416-224 1556, 944 29 79 556 |
| விழுப்புரம் | - | 04146-251022, 83 44 411 022 |

**சென்னையில்**

| | | |
|---|---|---|
| ஆதம்பாக்கம் | - | 83444 33116, 044-42130 056 |
| அம்பத்தூர் | - | 044-2624 1070 93846 72249 |
| மவுண்ட் ரோடு | - | 044-2841 2300 |
| புரசைவாக்கம் | - | 044 4357 7768 |
| இராயபுரம் | - | 044-2598 5753 83444 83222 |
| தாம்பரம் | - | 044-22261399, 94885 29099 |
| விருகம்பாக்கம் | - | 044-23 77 2339 |

**தூத்துக்குடியில்**

| | | |
|---|---|---|
| மங்கள் மஹால் | - | 0461-233 9743, |
| V.E. ரோடு | - | 83441 16000 0461-2337022 |

**திருநெல்வேலியில்**

| | | |
|---|---|---|
| பாளையங்கோட்டை | - | 0462-2577484, 90 474 80 484 |
| திசையன்விளை | - | 04637-271 010 |
| வள்ளியூர் | - | 94887 03188 04637-223 188. |

**தென்காசியில்**

| | | |
|---|---|---|
| ஆலங்குளம் | - | 99653 77427 |
| சுரண்டை | - | 83445 22555, 04633-262142 |
| சங்கரன்கோவில் | - | 83449 49555, 04636-223007 |

**கன்னியாகுமரியில்**

| | | |
|---|---|---|
| நாகர்கோவில் | - | 04652-279 469, 89032 79469 |
| மார்த்தாண்டம் | - | 94867 06832, 04651-205 211 |

**நாமக்கல்லில்**

| | | |
|---|---|---|
| நாமக்கல் | - | 93447 37196 |
| பள்ளிப்பாளையம் | - | 63815 12158 |

**திருவள்ளூரில்**

| | | |
|---|---|---|
| திருவள்ளூர் | - | 044-2766 5586 70105 86464 |
| திருத்தணி | - | 044-27885344 83449 49444 |

**கிருஷ்ணகிரியில்**

| | | |
|---|---|---|
| கிருஷ்ணகிரி | - | 95249 99711, 04343-230 081 |
| ஓசூர் | - | 04344-224 500, 95249 99722 |

**மதுரையில்**

| | | |
|---|---|---|
| சின்ன சொக்கிகுளம் | - | 0452-2531 305, 95244 15150 |
| சுப்புரமணியபுரம் | - | 0452-267 7300, 89735 33000 |

**திருச்சியில்**

| | | |
|---|---|---|
| தென்னூர் | - | 834411 9000, 0431-2741025 |
| தில்லை நகர் | - | 94433 40647 |

**ஜெபமலை**
04634-240245, 83 00 13 1000.

**வெளி மாநிலங்களில்**

| | | |
|---|---|---|
| சண்டிகார் | - | 94177 26492 |
| டில்லி | - | 011-256 16 253 |
| ஐதராபாத் | - | 040-420 24 222, 810 608 2222 |
| பாண்டிச்சேரி | - | 83 444 33 800 |
| ராஞ்சி | - | 952 333 6010 |

**கேரளாவில்**

| | | |
|---|---|---|
| கொச்சி | - | 94966 53183 |
| கோட்டயம் | - | 94967 44001, 99463 00001 |
| திருவனந்தபுரம் | - | 0471-233 13 92 92497 18266 |

**மும்பையில்**

| | | |
|---|---|---|
| தாராவி | - | 80 82 410 410, |
| மலாடு | - | 96640 50 567, 961999 6976 |

**கர்நாடகாவில்**

| | | |
|---|---|---|
| சிவாஜி நகர் | - | 963 28 14 414, 80 22 86 49 79 |
| பிரேசர் டவுண் | - | 959 10 77 110 |
| ஹாசன் | - | 953 54 05 816, 081 - 72253525 |
| மைசூரு | - | 98863 11777 |
| தும்கூர் | - | 77957 73773 |
| கோனன் குண்டே | - | 80881 36880, 080-2632 0152 |

**வெளி நாடுகளில்**

| | | |
|---|---|---|
| ஆஸ்திரேலியா | - | +61 421 949 920 |
| கனடா | - | +1 (416)806-2410 |
| துபாய் | - | +97 150 55 16 534 |
| மலேசியா | - | +60 322 762 219, +60 10 766 4123 |
| நியூஸிலாந்து | - | +64 953 74 133 |
| சிங்கப்பூர் | - | +65 973 57 763 |

**இலங்கையில்**

| | | |
|---|---|---|
| கொழும்பு | - | (+94)0112 93 01 52 |
| திருகோணமலை | - | (+94)071 06 90 909, (+94)026 222 1880 |

**அமெரிக்காவில்**

| | | |
|---|---|---|
| கலிபோர்னியா | - | +1 408 329 6899 |
| மேரிலேண்டு | - | +1 240 481 5268 |




உங்களது அவசர ஜெபக் குறிப்புகளை 24 மணி நேரமும் SMS மற்றும் Whatsapp மூலமாக தெரியப்படுத்த,
**+ 91 94 88 17 53 15.**
(இந்த எண்ணை SMS வழியாக ஜெபக் குறிப்புகளை அனுப்ப மட்டுமே பயன்படுத்தவும்.)

Our Website



Owned and Published by Bro. Mohan C. Lazarus, Printed by Sis. Joyce Lazarus at Nalumavadi - 13/81, Lakshmipuram, Angel Press and released through Nalumavadi-Jesus Redeems. Editor: Bro. Mohan C. Lazarus






'இயேசு விடுவிக்கிறார்' ஊழியங்கள்

**உலகளாவிய எழுப்புதல் திட்டத்தில்**

# நீங்களும் பங்காற்றலாம்!



**Bank Transfer:**

1) Bank Name : Tamilnad Mercantile Bank Ltd.,
Branch : Nalumavadi.
A/C Name : Jesus Redeems.
A/C No. : 449150310875001.
IFSC Code : TMBL0000449.

2) GPay (Google Pay) to **89038 35315.**

3) இணையதளம் (Website): www.jesusredeems.com

4)

| | |
|---|---|
| காசோலை (Cheque): | Jesus Redeems. |
| வரைவோலை (Demand Draft): | Jesus Redeems (or) Mohan C. Lazarus. |

5) **மணியார்டர் E.M.O.** *To Address:* Bro. Mohan C. Lazarus, Jesus Redeems, Nalumavadi - 628211, Thoothukudi Dist., T.N., India.

6) Bharat QR Scan & Pay — JESUS REDEEMS, TUTICORIN MID - 020000500397252 TID - QH277912

நமது 'இயேசு விடுவிக்கிறார்' ஊழியத்திற்கென்று வங்கிக் கணக்கு மூலமாகவோ, இணைய தளம் மூலமாகவோ, அல்லது Google Pay (G-Pay) மூலமாகவோ அனுப்பலாம்.

**காணிக்கை அனுப்பிய பின்பு,**
அதைக் குறித்த விபரத்தை 89038 35315 என்கிற இந்த எண்ணில் தொடர்பு கொண்டோ, அல்லது இதே எண்ணிற்கு WhatsApp மூலமாகவோ, அல்லது accounts@jesusredeems.org மூலமாகவோ
**எங்களுக்குத் தெரியப்படுத்தவும்.**

## நேரலை ஒளிபரப்பில்

(On Line) **LIVE**

திருப்பத்தூர்

# பரிசுத்த உபவாச ஜெபம்!

நாள்: 2021

## பிப்ரவரி 4,5,6.

நேரம்:

★ **வியாழன்** மற்றும் **வெள்ளி**, மாலை 3:00 - இரவு 9:00.

★ **சனிக்கிழமை** காலை 9:00 - மதியம் 1:00.

ஜெபமும், தேவ செய்தியும்:

சகோ. மோகன் சி. லாசரஸ்,
சகோ. C. எபிநேசர் பால்,
சகோ. G.P.S. ராபின்சன்,
சகோ. L. வின்சென்ட் ராஜ்,
போதகர் ஆஸ்பார்ன் ஜெபத்துரை.

பிரியமானவர்களே, நீங்கள் உங்கள் வீடுகளில் இருந்து கொண்டே, இந்த நேரலையில் பங்கு பெற்று, தேசத்தின் ஆசீர்வாதத்திற்காகவும், எழுப்புதலுக்காகவும் திறப்பிலே நின்று உபவாசித்து ஜெபியுங்கள்.

தொடர்புக்கு: 96001 53516, +91 90030 67777.

Youtube, Facebook மற்றும் Comforter Digital Channelலிலும் பார்க்கலாம்.

Jesusredeemsministries www.comfortertv.com Mohanclazarus

Registered with Registered News Paper of India No: 42579/83.
Postal Registration No: TTN/145/2021-2023
Overseas Registration No: TTN/241/2021-2023
Licensed to Post Without Prepayment No:TN/WPP-33/SR/2021-2023
Date of Publication: 25-01-2021.
Date of Posting: 27th to 30th of every month.
Office of Posting: BPC, Tuticorin HO - 628 001.